# சரஸா

தமிழ் சமூக நாடகம்






நாரதர்
ஸ்ரீநிவாச ராவ்
எழுதியது

# சரஸா

சமூகத் தமிழ் நாடகம்



ஆசிரியர் :

**டி. ஸ்ரீனிவாஸ ராவ், பி.ஏ.,**
பொறுப்பாசிரியர், 'நாரதர்,' சென்னை



**புது டெல்லியில்**
24-3-1956-ல் ரயில்வே உதவி மந்திரி
**கனம் ஒ. வி. அளகேசன்**
அவர்கள் தலைமையில் வெளியிடப் பெற்றது.

முதற் பதிப்பு—1956



விலை ரூபாய் ஒன்று



வெளியிடுவோர் :

கமலா பிரசுராலயம்
192, ஸர் ஹபிபுல்லா ரோடு,
தி. நகர், சென்னை-17




அச்சிட்டோர் :
ஞானோதயா பிரஸ்,
11, ஆண்டர்சன் தெரு,
சென்னை-1

காலஞ்சென்ற என் அருமைத் தந்தை

ஸ்ரீ பி. ஆர். தோத்தாத்ரி ராவ் அவர்களுக்கு

இதைச் சமர்ப்பிக்கிறேன்.

இந்நாடகம் பூரண உரிமை பெற்றது. ஆகவே, இந்த நாடகத்தை நடிக்க விரும்புவோர், நாடகாசிரியரின் முன் அனுமதியை எழுத்து மூலம் பெற்ருக வேண்டும்.

# சென்னை நிதி, கல்வி அமைச்சர்
# கனம் ஸி. சுப்ரமண்யம் அவர்களின் முன்னுரை

"ஸரஸா" எனும் நாடகத்தை நண்பர் ஸ்ரீ நாரதர் ஸ்ரீனிவாஸ ராவ் அவர்கள் இயற்றி, அதைப் பல இடங்களிலும் நாடகம் ஆடி, நடித்துக் காண்பித்து, மக்களின் பாராட்டுதலைப் பெற்றிருக்கிறார்கள். அந்நாடகத்தை இப்போது புத்தக ரூபமாக வெளியிட முன்வந்துள்ளார்.

கதை, நாவல்கள் எழுதுவதைவிட நாடகம் எழுதுவது மிகவும் கஷ்டமான காரியம். கதைகளிலும் நாவலிலும் நம்முடைய வசனத்தையே வைத்துக்கொண்டு, எழுதி முடித்து விடலாம். ஆனால், நாடகத்தில், பாத்திரங்களுக்கேற்ப, வசனமும், வாசகமும் அமைய வேண்டியது அவசியமாகிறது. ஆகவே, நாடகாசிரியருக்கு, கதா பாத்திரங்களின் உண்மை உணர்ச்சிகளும், நடை, உடை, பாவனைகளும், மொழி நடைகளும் மனதில் நன்கு பதிந்திருந்தாலொழிய, நாடகத்தை வெற்றிகரமாக எழுத முடியாது.

ஸரஸா ஒரு சமூக நாடகம். சமூகத்தில் நடக்கக்கூடிய சாதாரண நிகழ்ச்சிகளை, மக்களின் மனதைக் கவருகின்ற முறையிலே, சித்தரித்துக் காட்ட ஆசிரியர் முயற்சி செய்திருக்கிறார். அம்முயற்சியில் ஓரளவு வெற்றியும் கண்டிருக்கிறார்.

சமூக நாடகங்களில் வெறும் கதை மட்டும் பிரதானமல்ல. மக்களுக்கு ஒரு அடிப்படையான நீதியையும் எடுத்துக்காட்ட வேண்டியது மிக அவசியம். நாடகம் நடிக்கப்பட்டு, மக்கள் பார்க்கும்பொழுது, கதை விறுவிறுப்புடன் மக்களின் மனதிற்கு சலிப்பு ஏற்படாமல் இருக்க வேண்டியது நாடகத்தின் முக்கிய அம்சம்.

இந்த அம்சங்களை எல்லாம் வைத்துப் பார்க்கும்பொழுது, "ஸரஸா" ஒரு வெற்றிகரமான நாடகம் என்றே கொள்ளலாம். இந்நாடகத்தை படித்துமிருக்கிறேன்; நாரதர் ஸ்ரீனிவாஸ ராவே பிரதான பாகத்தை ஏற்று நடித்துப் பார்த்திருக்கின்றேன். இந்நாடகம், பள்ளிக்கூடங்கள் போன்ற ஸ்தாபனங்கள் முதற்கொண்டு, எல்லோராலும் நடிக்கப்படக்கூடிய முறையில் அமைந்திருக்கிறது. ஆசிரியர் இத்துறையில் பல நாடகங்களை எழுதி வெற்றி காண்பார் என நம்புகிறேன்.

சென்னை
15-3-56

ஸி. சுப்ரமண்யம்

# முன்னுரை

இருபத்தோரு வருஷங்கள் கழிந்து விட்டன, 'சரஸா', நாடகம் நாரதரில் பிரசுரமாகி. அது புத்தக உருவில் இப்பொழுது தான் வெளிவந்திருக்கிறது. இவ்வளவு காலம் கழித்து வெளி வந்தாலும், அது ஒரு விசேஷத்தோடுதான் வெளி வந்திருக் கிறது என்பதை எண்ணும்பொழுது, எனக்கு ஒரு தனி மகிழ்ச்சி ஏற்படுகிறது. அது என்ன விசேஷம் என்பதை அறியவிரும்பு வீர்களே!

சரஸா நாடகம் 99 தடவைகள் நடந்து, நூறுவது தடவை யாக நமது பாரத நாட்டின் தலைநகரான புதுடில்லியில், தக்ஷிண பாரத் சமாஜம், கர்நாடக சங்கீத சபா ஆகிய இரு சபைகளின் பொது ஆதரவில் டில்லியின் முதல் தமிழ் நாடக விழாவிலே நடத்தப்படும்பொழுது இந்த சரஸா நாடகப் புத்தகம் வெளி யிடப்படுகிறது; இந்த வைபவத்திலே இந்திய சர்க்கார் ரயில்வே உப மந்திரி கனம் ஓ. வி. அளகேசன் கலந்துகொண்டு இந்நாடகத்தைப் பாராட்டி, இப்புத்தகத்திற்கு ஆசி கூறு கிறார் என்பது விசேஷமில்லையா? புதுடில்லியிலே ஒரு தமிழ் புத்தகம் வெளியிடப்படுவதென்பது இதுதான் முதல் தடவை என்று நினைக்கிறேன். அதுவும் ஒரு விசேஷந்தானே?

'நாரதரு'க்காக நான் எழுதியுள்ள பல நாடகங்களில் சரஸா முதலாவது ஆகும். இது ஒரு கன்னட நாடகத்தைத் தழுவி எழுதப்பட்டதாகும். நவரசங்களும் நிறைந்த நாடகம் இது.

ஒரு பெரிய குடும்பத்தில் பிறந்த முரளி, முகுந்த் ஆகிய இருவரும் சகோதரர்களானாலும், எல்லா விஷயங்களிலும் முற்றிலும் மாறுபட்டவர்கள். முரளி நன்றாகப் படித்தவன்; தம்பி முகுந்த் வெறும் அசடு. முரளி முற்போக்குள்ளவன். வேறு ஜாதியிலே ஒரு பெண்ணை மணந்து கொண்டான். அது

காரணமாக, தனது தனவந்த தாத்தாவால் நிராகரிக்கப்பட்டு, பல கஷ்டங்களுக்கு உள்ளாகி, முடிவில் கொலைக் குற்றம் சாட்டப்படுகிறான். முகுந்தன் கெட்ட சகவாசத்தால் குட்டிச்சுவராகிறான். கடைசியிலே தாத்தாவின் உயில், முரளிக்கே கிடைக்கிறது. பொறுமைக்கு ஒரு உதாரணமாக விளங்குகிறான் முரளி. அதே மாதிரி, ஒரு உத்தம ஹிந்து பத்தினிக்கு தக்க உதாரணமாக விளங்குகிறாள் முரளியை மணந்த சரஸா. படித்தவள்தான். ஆனாலும் இந்தியப் பண்பு உள்ளவள்.

இந்தக் குடும்பத்தின் கதையையே, மளமளவென பாய் விரிப்பது போல், உங்கள் முன் கொண்டுவந்து நிறுத்துகிறது இந்நாடகம்.

நூறுதடவைகள் நடத்தப்பட்டாயிற்று. எத்தனைதடவை நடத்தினாலும் இதற்கு ஒரு தனி ஆதரவு இருக்கத்தானிருக்கிறது. சோகம், சிரிப்பு, சோகம், சிரிப்பு என்று மாறி மாறி வருவதால், நாடகம் பார்ப்பவர்களுக்கு அலுப்பே ஏற்படுவதில்லை. அதோடு, சிருங்கார ரஸமும் மிகமிகக் குறைவாகவே வைக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் இது பள்ளி மாணவர்களாலும் படிக்கப்படலாம், நடிக்கப்படலாம் என்று இதற்கு முகவுரை எழுதியுள்ள கனம் கல்வி மந்திரி அவர்களும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

கடாபுடா பாணியில் இல்லாமல், சரளமான நடையிலேயே சம்பாஷணை அமைக்கப்பட்டிருக்கிறது. இந்நாடகம் எனது கோஷ்டியாரால் நடிக்கப்பெற்றபொழுது எடுக்கப்பெற்ற சில படங்களும் இப்புத்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்நாடகத்தை நடத்துவோருக்கு, எந்தெந்தக் கதா பாத்திரங்களுக்கு எந்தெந்தமாதிரி உடைகளணியலாம் என்பதை இவை காட்டி உதவலாம்.

இந்த நாடகம் என் கோஷ்டியினரால் சென்னையிலே பல தடவைகளிலும், முக்யமாக அறுபதாவது காங்கிரஸ் மகா

சபைக் கூட்டத்தை ஒட்டி நடந்த பிரும்மாண்டமான காங்கிரஸ் பொருட் காட்சிக் கலை அரங்கிலும், தூத்துக்குடி எஸ். ஏ. வி. ஹைஸ்கூல் நூருவது ஆண்டு விழா நினைவுக் கட்டிட உதவி நிதிக்காக தூத்துக்குடியிலும், மாயவரம், தஞ்சாவூர் ஆகிய நகரங்களிலும் நடத்தப் பெற்றிருக்கின்றன. இந்நாடகத்தை ஆனந்தவிகடன், கல்கி, சுதேசமித்திரன், ஹிந்து மற்றும் பல பத்திரிகைகளும் புகழ்ந்து பாராட்டியிருக்கின்றன. கல்கி ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்தி அவர்களும், பல மந்திரிகளும், முக்யமாக நமது கல்வி மந்திரி கனம் ஸி. சுப்ரமண்யம் அவர்களும் இந்நாடகத்திற்குத் தலைமை வகித்துப் பாராட்டியிருக்கிறார்கள். கனம் ஸி. சுப்ரமண்யமே இந்நூலுக்கு அன்போடு அழகாக முகவுரை எழுதியிருக்கிறார். அவர்களனைவருக்கும் எனது அன்புகலந்த வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

என்னுடன் பூரணமாக ஒத்துழைத்து, இதனை அழகுற அச்சிட்டுத் தந்த சென்னை ஞானோதயா பிரஸ் அதிபர் ஸ்ரீ ஆர். சூர்யநாராயணனுக்கு நான் எவ்வளவு வந்தனம் சொன்னாலும் போதாது.

இதை வெளியிடும் கமலா பிரசுராலயத்தாருக்கும் என் நன்றி. எனது நாடகங்களுக்கு அளித்து வருவது போலவே இந்த எனது முதல் நாடக நூலுக்கும், நாடகாபிமானிகள் நல்ல ஆதரவை அளிப்பார்கள் என்று பூரணமாக எதிர்பார்க்கிறேன்.

'வசந்த மஹால்'
192, ஸர் ஹபிபுல்லா ரோடு,
தியாகராயநகர், சென்னை-17.

டி. ஸ்ரீநிவாச ராவ்




பிறந்தநாள் வைபவத்தில் முரளியும், ஸரஸாவும் குழந்தையுடன்



முரளியும் அவனது பழைய சிநேகிதர்களும்

# ஸ ர ஸா

காட்சி 1.

இடம் : முரளியின் வீடு

(முரளியின் வீட்டில் ஒரு ஹால். இரு புறமும் நாற்காலிகள் போடப்பட்டிருக்கின்றன. நடனத்திற்கான பக்க வாத்தியக்காரர்கள் ஒரு புறம் இருக்கிறார்கள். நாயனப்ளேட் ஒலிக்கிறது. ஒவ்வொருவராக வந்துகொண்டிருக்கிறார்கள். முரளி எல்லோரையும் வரவேற்கிறார். சரஸா ஒரு இரண்டு வயசுக் குழந்தையைத் தூக்கிக்கொண்டு ஒரு புறம் நிற்கிறாள். அவளும் வருவோருக்கு நமஸ்காரம் சொல்லுகிறாள். ட்ரிங்க்ஸ் கொடுக்கிறார்கள்.)

முரளி : டான்ஸ் ஆரம்பமாகட்டும் அப்பா! உம். நேரமாச்சு. (டான்ஸ் நடக்கிறது. ஒரு டான்ஸ் முடிந்ததும் நான்கு பேர்கள் எழுந்து 'போய் வருகிறேன்' என்கிறார்கள். முரளியும் அவர்கள் முன்வர, திரை பின்னால் விழுகிறது.)

முரளி : நீங்கள் வந்து கௌரவித்தது எனக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம். ரொம்ப தாங்க்ஸ். திடீரென்று என்னுடைய மிஸஸ் சொன்னாள், குழந்தையின் பிறந்த நாளைக் கொண்டாடலாமென்று. சரி என்று சொல்லி விட்டு, சட்டென்று ஏதோ ஸிம்பிளாக ஏற்பாடு செய்தேன். இட நெருக்கடி. பெரிய விருந்து நடத்தலாமென்றால் உணவு நெருக்கடி.

ஒருவர் : வாஸ்தவந்தான்...நீங்கள் செய்தவரை ரொம்பப் பிரமாதம். டான்ஸ் ஆடினது யாரு? குமாரி வனஜான்னு...

முரளி : அ ..அ...அவளேதான். பிரபலமாகிக்கொண்டுவரும் அதே ஆர்ட்டிஸ்ட் தான்.

ஒருவர் : பார்த்தாலே தெரிகிறதே. பிரமாதம் போங்கள். மனசு என்னமோ செய்தது. அதோடே வீட்டில் கொஞ்சம் வேலேயுங்கூட. புறப்படுட்டேன். வரட்டுமா ?

முரளி : ஆஹா...(எல்லோருக்கும் நமஸ்காரம் செய்துவிட்டு உள்ளே போகிறுன்.)

(திரை விழுகிறது)

## காட்சி 2.

### இடம் : ஜமீன்தார் வீட்டில் ஓர் அறை

பாத்திரங்கள் : ஜமீன்தார், முகுந்தன், கனபாடிகள்.

(ஜமீன்தார் ஒரு மேஜையின் முன்னுல் உட்கார்ந்து கொண்டிருக்கிருர். அவருக்குப் பக்கத்தில் கனபாடிகள் பகவத் கீதையைப் பாராயணம் செய்துகொண்டிருக்கிருர்).

பரித்ராணுய ஸாதூனும் விநாசாய சதுஷ்கிருதாம்
தர்ம சம்ஸ்தாபனுர்த்தாய ஸம்பவாமி யுகே யுகே.

கன : கீதையிலே பகவான் பரித்ராணுய ஸாதூனும்...(அப்பொழுது முகுந்தன் வருகிறுன்.)

ஜமீன் : வாடா அப்பா முகுந்தா...

முகுந் ; என்ன தாத்தா ?

ஜமீன் : உன் படிப்பு விஷயம் எப்படி இருக்கிறது ?

முகுந் ; இல்லே தாத்தா...

ஜமீன் ; என்னடா கர்மம்! பதில் சொல்ல ஆரம்பிக்கும் போதே இல்லே தாத்தா...

முகுந் : ஆமாம் தாத்தா. இந்த வருஷம் பரீக்ஷை பாஸாய்ப் போய்விடும் போலிருக்கு...

ஜமீன் : போலே இருக்குதான? பேஷ். வருஷம் நாலாச் சேடா ஸ்கூல் பைனல் க்ளாஸிலே! அம்பிட்டுப் பையன்களெல்லாம் பாஸ் பண்ணிட்டுப் போயிட்ரு... நீ மட்டும்...

முகுந் : இல்லே தாத்தா! வாத்தியார் அவாளை மாத்திரம் ரொம்பக் கவனிக்கிறர். என்னைக் கவனிக்கிறதே இல்லே. அதோடே ஒரு நாள் அவர் வீட்டிற்குக் காய் கறி வாங்கிக் கொடுக்கும்படி கூப்பிட்டாராம்... அதற்கு நான் போகலையாம்... அதற்காகப் பரீக்ஷைக்கு அனுப்பவே மாட்டேனென்கிறர்...

ஜமீன் : சீ அசடே! ஏதாவது வாயிலே வந்ததை உளருதே!

முகுந் : இப்படித்தான் தாத்தா...(கண்ணைக் கசக்கிக் கொண்டே) நீ எப்பப் பார்த்தாலும் என் மேலேயே குற்றம் சொல்றது! நான் எவ்வளவு படித்தாலும் உனக்கு விஸ்வாஸமே இல்லே...

ஜமீன் : அட மட சாம்பிராணி! நீ படிக்கிறதாவது, எனக்கு விஸ்வாஸ மேற்படறதாவது? மூடம்! அம்மாவும் போயாச்சு. பாட்டியுமில்லே. பாவம், போறது, தாயில்லாப் பிள்ளைகளாச் சேன்னு விட்டு வருகிறேன். கெட்ட சகவாசம் உனக்குப் பலமாகிறது. இனி மேலே...

முகுந் : (அழுது கொண்டே) இல்லே தாத்தா. இனிமேலே நான் நன்ன வாசிக்கிறேன்! நீ சொல்றபடி கேக்க றேன் தாத்தா.

ஜமீன் : பலே! அதுன்ன சமர்த்துப் பிள்ளைகளுக்கு அடையாளம். புத்தியாக இருந்தாயானல் சுகமடைகிறய். இல்லாவிட்டால்...

முகுந் : புத்தியாக இருக்கேன் தாத்தா. எனக்கு பவுண்டன் பேனு இல்லே தாத்தா...அதனுலேதான்......

ஜமீன் : அதனுலேதான் குடி முழுகிப் போச்சோ? ஐயோ... ரொம்ப சமர்த்து...(வேணு வருகிறுன் கடிதத்துடன்).

முகுந் : கொண்டாடா இங்கே தபாலே! தாத்தா! இதோ பாரு தாத்தா! அண்ணு முரளிகிட்டேயிருந்து ஒரு லெட்டர் வந்திருக்கு.

ஜமீன் : எங்கே, இப்படிக் கொடு...(வாசிக்கிருர்) ஆஹா... கெட்டான் பயல்...காரியம் மிஞ்சிவிட்டது. சீ. சீ... ஜமீன்தார் ராமச்சந்திரய்யர் குடும்பம் இப்படியா போகவேண்டும்! ஜாதிவிட்டு ஜாதிபோய்க் காதல் கல்யாணமா? என்ன துணிச்சல்! இவனுக்கு நான் இன்னும் உதவி செய்ய வேண்டுமாம்...அடபயலே! என்ன நெஞ்சமுத்தமடா?

முகுந் : என்ன தாத்தா, அது எந்தப் பயல் தாத்தா, உங்க வாயிலே அகப்பட்டு முழிக்கிற பயல்?

ஜமீன் : (கோபத்துடன்) எல்லாம் உனக்கு முன்னுலே பிறந்த முழு முண்டந்தான்...

முகுந் : யாரு தாத்தா? அண்ணு முரளியா?

ஜமீன் : ஆமா...ஆமா...

முகுந் : எங்கே தாத்தா இருக்கிறுன் அவன்?

ஜமீன் : குட்டிச்சுவரிலே!

முகுந் : அதெங்கே தாத்தா? அதுக்குச் சின்ன ரயிலா, பெரிய ரயிலா?

ஜமீன் : ஐயோ...வாயை மூடேன்!

முகுந் : இதோ...(வாயை மூடிக் கொள்கிறுன்.)

ஜமீன் : கனபாடிகளே! காரியம் குடிகெட்டுப் போச்சு...! என்ன செய்யறதுன்று தெரியலேயே! அடே முகுந்தா! கனபாடிகளுக்கு நமஸ்காரம் செய்தாயோடா?

முகுந் : எதுக்குத் தாத்தா ?

ஜமீன் ; பெரியவாளுக்கு நமஸ்காரம் பண்ணினா பரீக்ஷை பாஸா கும், போ.

முகுந் : இவருக்கு நமஸ்காரம் செய்யறேன்னு எங்க வாத்தி யாருக்கு எப்படித் தெரியும் தாத்தா ?

ஜமீன் : கனபாடிகளே ! இதைப் போல அசடுகள் உண்டோ ? இதெல்லாம் சேர்ந்து என் கவலையை தினே தினே அதிகமாக்கி, என்னை அற்பாயுசு மரணத் திற்கு ஆளாக்கிவிடும் போலிருக்கே ! இன்னும் சதாபி ஷேகம்கூட ஆகவில்லை.

கன : பிரபோ ! அப்படிக் கவலைப்படும்படியாகத் தங்களுக்கு என்ன வந்து விட்டது ?

ஜமீன் : கனபாடிகளே...என்ன சொல்றேள் அப்படி ? இதோ பாருங்கோ இதை...(கடிதத்தை நீட்டுகிறார்)

கன : (கடிதத்தை வாங்கி முகுந்தனிடம் கொடுத்து) குழந்தே, வாசியேன் இந்தக் கடிதத்தை !

முகுந் : (கடிதத்தை வாங்கி) இப்ப மாத்திரம் வாசிக்கணு மாக்கும் ? அப்ப தாத்தாவே எங்கிட்ட கொடுக்கலை யாம்.

ஜமீன் ; கொண்டாடா அதை இப்படி.

முகுந் : இல்லை தாத்தா, வாசிக்கிறேன்.

அருமையுள்ள தாத்தாவுக்கு,

முரளி...வாசிக்கிறேன் தாத்தா ! கொஞ்சம் இருங்களேன். முரளி நமஸ்காரம். நான் மைசூரில் தசரா பார்த்த பின்னர் எனது நண்பரொருவருடன் சென்னைக்குச் சென்றேன். அங்கி ருந்து சிதம்பரத்திற்குச் சென்றிருந்தேன். அங்கே ரிடையர்ட் டிபுடி கலெக்டர் மாதவராவின் பெண், சரஸா ரொம்ப அழ குள்ளவள்...(சிரித்து) ரொம்ப அழகாமே தாத்தா ! (நகைக் கிறான். ஜமீன்தார் கோபத்துடன் பார்க்க, முகுந்தன் மேலே

வாசிக்கிறான்) தங்கமான குணம். அவளை இக்காலத்திய பேஷனில் காதல் கல்யாணம் செய்துகொண்டு சுகமாக இருக்கிறேன்! ஐயோ...தாத்தா...! அண்ணாவுக்குக் கல்யாணம் ஆயிடுத்தாமே...எனக்கு?

ஜமீன் : சரிதான், மேலே வாசி.

முகுந் : (கடிதத்தை முதலிலிருந்து வாசிக்க ஆரம்பித்து) அருமையுள்ள தாத்தாவுக்கு முரளி நமஸ்காரம்...

ஜமீன் : என்னடா பித்து, முதல்லேருந்து வாசிக்க ஆரம்பிக்கிறே?

முகுந் : மேலே வாசிக்க சொன்னேளே...

ஜமீன் : (கோபத்துடன்) இப்படித்தானே?

முகுந் : (கெஞ்சிய வண்ணம்) எப்படி?...

ஜமீன் : கல்யாணம் ஆயிடுத்தா?

முகுந் : ஆயிடுத்து.

ஜமீன் : அதுக்கப்புறம்...?

முகுந் : அதுக்கப்பறம், கல்யாணம்,...கல்யாணம்...(முன்பு நிறுத்திய இடத்தைக் கடிதத்தில் தேடுவதுபோல் பாவனை செய்து) கல்யாணத்தின் போது என் மாமனார் கொடுத்த பணத்தை வைத்துக்கொண்டு ஒரு லைப் இன்ஷ்யூரன்ஸ் ஏஜன்ஸி எடுத்துக்கொண்டு காஞ்சீபுரத்துக்கு வந்தேன்...வருஷம் ஒன்றரை ஆகப் போகிறது. என் பையன் சந்துரு விதவிதமான விளையாட்டுகள் விளையாடுகிறான்...

அண்ணாவுக்கு பாப்பாகூட பிறந்துடுத்தாமே. பேஷ்! கூடிய சீக்கிரம் அங்கே வருவேன். இப்பொழுது லைப் இன்ஷ்யூரன்ஸ் வேலை அவ்வளவு திருப்தியாக இல்லை. ஆகையால் இந்தக் கடிதம் கண்டவுடன் இரண்டு அல்லது மூவாயிரத்துக்கு ஒரு செக் அனுப்பி வைக்கவும். மீனாக்ஷி பெரியம்மா, முகுந்த், நம்ம

ராதா, கனபாடிகள், வேணு எல்லோரும் சௌக்கியந் தானே? உடனே பணம் அனுப்பவும். தங்கள் உடம்பு சுகந்தானே?

இப்படிக்கு,

தங்கள் அன்புள்ள

முரளி.

கன: ஏது, முரளி இவ்வளவு தேர்ந்து போனுனு?

ஜமீன்: உடம்பிலே திமிர் ஏறிவிட்டது.

முகுந்: தாத்தா!

ஜமீன்: பேசாதே! என்ன கனபாடிகளே, இந்த அக்ரமத் தைப் பார்த்தீர்களா? பசுப்போல இருந்த முரளி எப்படி ஆனுன் பாரும்.

கன: பிரபோ, இப்பொழுது என்ன செய்யப் போகிறீர்கள்?

ஜமீன்: என்ன செய்யறதா? (தானே ஒரு கடிதம் எழுதி கவரில் போட்டு) அட முகுந்தா, காகிதத்தைத் தபா லில் நீயே கொண்டு போய் பத்திரமாகப் போடு. தெரிந்ததா? நீயும் ஏதாவது வாலாட்டினுயோ, உனக் கும் இதே கதிதான்...

(முகுந்தன் போகிறுன்)

கன: ராம...ராம...ராம, சீத்தா ராமா...ஹரே முகுந்தா!

ஜமீன்: கனபாடிகளே! அந்தப் பீடையைப்பற்றி இனி நினைக் கவும் கூடாது! கீதை எடுத்து வாசிங்கோ கேட்க லாம்,

கன: ஆஹா! சீத்தாராமா...பரித்ராணுய...

(திரை விழுகிறது)

காட்சி 3.

## இடம்: தெருவு

பாத்திரங்கள்: முகுந்தன், நடராஜன்.

(முகுந்தன் சந்தோஷத்துடன் வருகிறான் பாடிக் கொண்டு)

முகுந்: ஹி...ஹி(வாய்விட்டுச் சிரித்து) ரொம்ப ஷோக். முரளி பாடு தீர்ந்தது. இனிமேலே தாத்தாவுக்கு நம்மை விட்டா வேறே கதியில்லை. நமக்கு நடராஜனை விட்டால் விதியில்லை! இந்த நடராஜன் பயல் சொன்ன நேரத்துக்கு அதிகமாகி விட்டதே! நான்...(சீட்டி அடித்துக்கொண்டே நடராஜன் வெகு டீக்காக உடை உடுத்து வருகிறான்)

நட; ஹல்லோ முகுந்த்! குட் ஈவ்னிங்...

முகுந்; குட்டும் வேண்டாம்...ஈவ்னிங்கும் வேண்டாம். இனி மேலேஏ...ஏ..., நான், நீ சொல்றபடி கேட்க முடியாது, போ!

நட: அதேண்டா அப்படி?

முகுந்; ஏன்று, 5-30-க்கு வருகிறேனென்றாய், 5-31-க்கு வந்தி ருக்கிறாயே? நான் எவ்வளவு ஆவலாக உன்னை எதிர் பார்த்திருந்தேன் தெரியுமா?

நட; என்னதான் சொல்லேன்!

முகுந்: நடராஜா.. நடராஜா...! ரொம்ப ஹாப்பி நியூஸ் போ!

நட: அப்படியா! சந்தோஷச் செய்தியா? நிஜமாகவா...? சொல்...சொல் சீக்கிரம்!

முகுந்: நடராஜா! உம்.. ஒரு யோசனை இப்போ தோன்றது... நீ என்ன சொல்றே?

நட : யோசனே என்னவென்று தெரிந்தால்தானே என் அபிப்ராயத்தை வெளியிடலாம்.

முகுந் : நடராஜா ! உம்...உன்னே நடராஜா...நடராஜா என்று கூப்பிடுவதனுல் எனக்கு ரொம்ப வாய் வலிக்கிறது.

நட : அதனுலே...?

முகுந் : அதனுலே உன்னே இங்கிலீஷ் பேஷன்லே, 'நாட்டி' என்றுதான் இனிமேல் அழைக்கப் போகிறேன். நாட்டி ! நாட்டி ! ஆஹா...எவ்வளவு அழகாக இருக்கிறது. ஹல்லோ நாட்டி !

நட : எப்படியாவது வைத்துக் கொள்.

முகுந் : நாட்டி ! பாரு, எங்கண்ணு முரளி இருந்தானே...

நாட்டி : (கலவரத்துடன்) அதென்னடா அப்படிச் சந்தேகம் ? தசராவுக்கு போனவன் கயாவா ?

முகுந் : இல்லேடா ! இனிமேலே எங்கள் வீட்டிலே அடியெடுத்து வைத்தால், உன் காலே முறிச்சிடுவோம்... (கையை ஓங்குகிருன்)

நாட்டி : (பீதியுடன்) என் காலேயா ?

முகுந் : ஹி...ஹி... (நகைத்து) உன் காலே இல்லேடா. எங்க தாத்தா அப்படின்னு எங்கண்ணு முரளிக்கு கடிதம் எழுதச் சொன்னுர்...

நாட்டி : எதுக்கடா அப்படி ?

முகுந் : நம்ப பாடு குஷியாவதற்குத்தான் ! இதோ பார் கடிதம். என் தாத்தா கைப்பட எழுதியது. அட நாட்டி (வருத்தத்துடன்) எங்க தாத்தாகிட்டே நீ சொல்லிக் கொடுத்தாப்பலெல்லாம் ரொம்ப நைசாப் பேசி, பவுண்டன் பேனு கேட்டேண்டா ! அவர் சள்ளுன்னு விழராருடா !

நாட்டி : உனக்கு மூளேயே கிடையாதுடா.

முகுந் : எனக்கா ?

நாட்டி : கொஞ்சங்கூடக் கிடையாது.

முகுந் : அப்படின்னு ரொம்பச் சரிபோ! இனம் இனத் தோடே சேரும்னு, நம்ம தமிழ் வாத்தியாரு சொல் லிக் கொடுத்திருக்கிறாரா, இல்லேயா ? அது சரியாப் போச்சு! நான் உன்னேடு சேர்ந்திருக்கிறேனு இல்லியா ?

நாட்டி : அட அசடே! முரளிமேலே தாத்தா கோபமா இருக் கறபோதுதானு, பேனு கேக்கற சமயம் ? கொண்டா கடிதத்தை இப்படி! (வாங்கி வாசித்து) அடே முகுந்த்! இனிமே என்ன போ, உனக்குக் கவலேயே இல்லே. அது சரி, இந்த சந்தோஷச் செய்தியைக் கொண்டு வந்ததன் ஞாபகார்த்தமாக எனக்கு நீ டிபன் சப்ளே செய்ய வேண்டாமா ?

முகுந் ; ஆமாண்டா நாட்டி. ஷோக்கா ஏதாவதொரு பஸ்டு கிளாஸ் ஹோட்டலுக்குப் போகவேண்டியதுதான்... ! ஆனல்... ! (பையைத் தடவி) பையில் காசில்லேயே...

நாட்டி : என்ன போ! பையிலே தானுகவா முளேக்கும் காசு ?

முகுந் : எங்க தாத்தா எதையும் மறந்து போகவே மாட்டேன் என்கிறுரேடா! அடே நாட்டி! எங்க தாத்தா வைகுந்தத்தைப் பார்த்தா, என் பை நிறையப் பணம் சேந்தாப்போலே... !

நாட்டி : அப்படின்னு, உங்க தாத்தா காலமாகிறவரைக்கும் நான் காபி சாப்பிடாமே இருக்கறேன்.

முகுந் : இன்னெண்ணுடா! அந்த கனபாடிகள் பொண்ணு பத்மாவிடத்திலே இரும்புப் பெட்டிச் சாவியைக் கொடுத்திருக்கிறுர், தாத்தா. அவள் தாத்தா, தாத்தா, தாத்தா, தாத்தா என்று பலாப்பழத்தைச் சுற்றுகிற

ஈ மாதிரி தாத்தாவைச் சுற்றிக்கொண்டே இருக்கிருளே!

நாட்டி : பத்மா நல்ல அழகிதானே ?

முகுந் : அவளுக்கு முரளியைக் கல்யாணம் செய்துகொள்ளணும்னு இஷ்டமாம்...

நாட்டி : இதென்ன, கனபாடிகள் பெண், ஜமீன்தார் பேரன், முரளியையா ?

முகுந் : செய்துகொண்டால் என்னடா ? பத்மாதான் அழகா இருக்காளே! ரொம்பச் சமர்த்து! கனபாடிகள் பெண்ணுன்னு நெத்தியிலே எழுதி ஒட்டியிருக்கோ ?

நாட்டி : அப்படியானுல் ஒரு யோசனே சொல்றேன் கேக்கறியா ?

முகுந் : உம்! நீ சொல்லி நான் கேட்காமல் போனுல், என்ன பிரெண்ட் வேண்டியிருக்கு ?

நாட்டி : முரளியோ யாரோ ஒரு பெண்ணைக் கல்யாணம்செய்து கொண்டு விட்டான். தாத்தாவுக்கும் முரளியைக் கண்டா பிடிக்கலே. அதனுலே பத்மாவை நீயே...

முகுந் : நாட்டி, நல்ல யோசனே. பலே ஷோக் யோசனே. எனக்கு வயசாகலேயா? ஸ்கூல் பைனல் படிக்கலேயா? இந்த தாத்தா எனக்கு ஏன் கல்யாணம் செய்யக் கூடாதுன்னு கேட்கறேன்.

நாட்டி : மெள்ள பேச்சு வாக்கிலே தாத்தாவிடம் சமாசாரத்தைச் சொல்லு. அதோடே கனபாடிகளேயும் கொஞ்சம் தூண்டிவிடு. ஆயிட்றது காரியம். அப்புறம்...

முகுந் : நம்ப பாடு குஷி...! சினேகிதன்னு நீதாண்டா சினேகிதன். இப்படி பஸ்டு கிளாஸ் யோசனே யார் சொல்லப் போருு நாட்டி...? (போகிருர்கள்)

(திரை விழுகிறது)

காட்சி 4.

## இடம்: ஜமீன்தார் வீட்டில் ஓர் அறை

பாத்திரங்கள்: பத்மா, கனபாடிகள், முகுந்தன், வேணு.

(பத்மா ஏதோ தனியாக யோசனையுடன் இருக்கிருள்)

### விஜயநாகரி—ஆதி

பத்மா:

சுகமேது புவிமீதிலே—கலந்த
சுருதிமீளும் இசைபோலஎன்—இகவாழ்வில் (சுக)

பகையானுர் என் தந்தையே பாரில்
பழியாக பலதுன்பமே மிகவே (சுக)

தினம் என்மனம் தன்னிலே இனிதாய்
திகழும் நல்முரளீதரர் துணையாய்
இனம்கண்டு மணந்திடகனவே கண்டேன்
இலவின் கிள்ளையாகினேன் இனியே (சுக)

பத்மா: அப்பாவின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். உண்ணவும், உடுத்தவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த என் நிலைமை என்றும் இப்படியே இருக்குமோ என்று இருந்தேன். ஆனல் நம்முடைய தகப்பனுர் வெறும் கனபாடிகளானுலும், பிடித்தாலும் புளியங்கொம் பையே பிடித்தார். ஜமீன்தார் ராமச்சந்திரய்யர், இவரை, தன் மந்திரி போல் வைத்து நடத்தி வருகிருர். தாயற்ற என்மீது அத்யந்த ப்ரேமை ஏற்பட்டு விட்டது. ஆயினும் என்ன பயன்? என் தந்தை என்னே இந்த ஜமீன்தார் வீட்டிற்கு அழைத்து வந்த அன்று, முதன் முதலாக முரளீதரரைக் கண்டேன். கண்டதும் என் மனமெல்லாம் அவரிடமே லயித்து விட்டது. நான் துரதிர்ஷ்டசாலியென்றே தான் கூற

வேண்டும். எப்படியாவது நான் முரளீதரரை மணம் செய்துகொள்வேன் என்று மனக் கோட்டை கட்டிக்கொண்டிருந்தேன். இப்பொழுது என் எண்ணம் பாழாய்விட்டதே !

( கனபாடிகள் ராமஸ்மரணை செய்துகொண்டே வருகிருர் )

கன : பத்மாவா அது ?

பத்மா : ஆமா...

கன : பத்மா, இங்கே என்ன செய்துகொண்டிருக்கிருய் ?

பத்மா : ஒன்றுமில்லே, அப்பா ! உள்ளே காரியம் எல்லாம் ஆகிவிட்டது. தாத்தாவுக்கு காப்பி ஆற்றிக் கொடுத்துவிட்டேன். உங்களுக்கு பூஜைக்கு வேண்டிய சாமான்களேயும் எடுத்து வைத்தேன். அப்புறம் காற்ருட இப்படிக் கொஞ்சம் வந்தேன்.

கன : சரிதான், சரிதான்...சரி...தான்னேன் ! பத்மா ! இப்படி வா ! பக்கத்திலேன்னேன் ! ஒரு சமாசாரம் ரகசியமாய்ச் சொல்லணும்னேன் ! சீத்தாராமா...(அருகே சென்று) பத்மா, இதோ பாரு, நீ ரொம்ப சமத்தோல்லியோ... ?

பத்மா : என்னப்பா இது, சமாசாரத்தைச் சட்னு சொல்லுங்களேன் !

கன : ஏதோ, விதி வஸாத், ஈஸ்வர கிருபாவஸாத், நீ நல்ல அழகோட பிறந்திருக்கே !

பத்மா : சொல்லுங்களேன் அப்பா !

கன : ஏதோ...நானும் ஜமீன்தார் வீட்டிலே வந்து சேர்ந்தேன். உன்னேயும் இங்கே கொண்டுவந்து சேர்த்துக்கொண்டேன். இனி இங்கே ஸ்திரமாயிருக்கிறதுக்கு வகையைத் தேடிக்கொள்ள வேண்டாமோடி பைத்தியமே !

பத்மா : (கேலியாகச் சிரித்துக்கொண்டே) என்னப்பா ! நீங்களே புத்திசாலி என்று சொன்னீர்கள். நீங்களே பைத்தியப் பட்டமும் கொடுக்கிறீர்களே !

கன : அவசரப்படாதே. ஏதோ பைத்தியமேன்னு வார்த்தைக்குச் சொன்னேன். உன்னை யாராவது பைத்தியம்னு சொல்லத் துணிவாளோ ? தாத்தா கொத்துச் சாவியைக் கையிலே வாங்கிக் கொள்ற சாமர்த்தியமுள்ள என் தங்கமோல்லையோ நீ ! சுப்பு கனபாடிகள் பொண்ணோ, கொக்கோன்னுனம் ! இப்போ...உம்... !

பத்மா : உம் ...! சொல்லுங்கோ.

கன : (கொஞ்சம் குரலைத் தாழ்த்தி) முரளியோ இனி இங்கே எட்டிப் பார்க்கவே முடியாது. பாக்கி இருக்கிறது முகுந்தன் ஒருவன்தான். ஜமீன்தாருக்கோ அளவில்லாமே இருக்கு சொத்து. அவருக்கோ வயசும் ஆயிடுத்து. சீக்கிரமே கண்ணையும் மூடிடுவார்... அவருக்கு முரளிமேலே இருக்கிற கோபத்திலே எல்லாம் முகுந்தனுக்குத்தான் எழுதி வச்சிடப் போறார்,

பத்மா ; ஏன் அப்பா இவ்வளவு பீடிகை? சமாசாரத்தைச் சொல்லாமலே நேரத்தைப் போக்கிறல்...?

கன ; நீ பேசாமல் முகுந்தனைக் கல்யாணம் செய்துகொண்டு விடு. இந்த வைகாசியிலேயே கல்யாணம் ஆயிடணும். அப்புறம் காலஹரணம் செய்தால், என் மானமும் போயுடும். முகுந்தனுக்கும் வேறே எங்கேயாவது நிச்சயமாயிடும் !

பத்மா ; என்ன, முகுந்தனையா ? நானு ? கல்யாணமா ? நீங்கள் சொல்வது இன்னதென்று உங்களுக்கே புரியாமல் பேசுகிறீர்களா ?

கன : பார்த்தாயா ! கனபாடிகள் பொண்ணுக்கு படிப்பு கிடிப்பெல்லாம் ஏற்பட்டா, இந்தத் தண்டாதான் !

பத்மா: அப்பா! அந்தப் பித்துக் கொள்ளி பேச்சையே எடுக்கவேண்டாம்! அவனைக் கண்டாலே எனக்குப் பிடிக்கலே!

கன: அட பைத்தியமே! தனக்காவது தெரியணும், இல்லாவிட்டா, இன்னொருவர் சொல்லியாவது தெரியணும். இப்போ...

பத்மா: எல்லாம் தெரியும் அப்பா.

கன: என்ன தெரிஞ்சது?

பத்மா: நான் முரளியைத் தவிர வேறே யாரையும் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டேன். மனமொத்த கணவனைக் கல்யாணம் செய்துகொண்டு அவருடைய சுக துக்கங்களில் பங்கெடுத்துக் கொள்வதுதான் சுகத்தைத் தரும். விரும்பாத கணவனைக் கல்யாணம் செய்து கொண்டு...

கன: அடி...அடி...அடி! போதுமே அதிகப் பிரசங்கம்! ஜமீன்தார் சொத்து அநியாயமாகப் போகப்போகிறதடி! சொன்னபடி கேட்டுத் தொலே. அதோ... அதோ.....முகுந்தனே வர்ராப்போலேருக்கு. நான் போறேன். ஜமீன்தாரிடம்...நினைவிருக்கட்டும், நான் சொன்னது. அ...?

(கனபாடிகள் போகிறார். வேறு திசையிலிருந்து முகுந்தன் சீட்டி அடித்துக்கொண்டு வருகிறான்)

முகுந்: (சட்டெனத் திகைத்து நின்று) ஹல்லோ! பத்மாவா? (தனக்குள்) பழம் நழுவிப் பாலிலே விழுந்தது. அது நழுவி வாயிலே விழுந்ததுன்னும். (வெளிப்படையாக) பலே பத்மா! யாருக்காகக் காத்துக்கொண்டிருக்கிறாய் இங்கே? எனக்காகத்தானே?

பத்மா: ஐயோ! உன்னைப் பார்க்கிறதுக்குக் காத்துக் கொண்டிருக்க வேண்டாமா?

முகுந் : (பல்லை இளித்து) பத்மா ! என்மேலே கோபமா ? நான் கெட்டிக்காரன்தானே ?

பத்மா : உன் சாமர்த்யத்தைச் சொல்லணுமா ? இது மாதிரி ஒரு சமர்த்துப் பையனை விட்டுவிடலாமா என்றுதானே உன்னை ஒரே வகுப்பிலே பல வருஷம் உட்கார வைத்திருக்கிறார்கள்.

முகுந் : அதிருக்கட்டும், எங்க நாட்டி இருக்கான் பாரு...

பத்மா : நாட்டியும் தெரியாது. பூட்டியும் தெரியாது.

முகுந் : எங்க நடராஜன் தெரியாது ? என் சினேகிதனுச்சே. அவனை நாட்டி நாட்டின்னுதான் கூப்பிட்றேன் இப்போ.

பத்மா : ஆமா ! உனக்கு ஊரிலே ஆயிரம் ஆண் பிள்ளைகள் சிநேகமா இருப்பா. அவ்வளவு பேரும் வீட்டிலிருக்கிற பெண்பிள்ளைகளுக்கும் அவசியம் தெரிஞ்சிருக்கணுமோ ?

முகுந் ; என்ன பத்மா, இப்படிக் கோபிச்சுக்கறே ? எங்க நாட்டி ஒரு நல்ல யோசனை சொன்னுன். எனக்கு வயசாயிடுத்தாம். அதனுலே எனக்குக் கல்யாணம் அவசியம் ஆகணும்னு சொல்ருன்.

பத்மா : இதென்ன கர்மம் வேண்டியிருக்கு. நான் போறேன். தாத்தாவுக்கு ஏதாவது வேண்டியிருக்கும்.

முகுந் : (வழியைமறித்து) தாத்தாவெல்லாம் தெரியுமெனக்கு. யார் தாத்தா அவர் ? எனக்குக் கல்யாணம் ஆகணுமாம்...அதனுலே...நீ என்னைக் கல்யாணம் பண்ணிக்கொண்டால்......நன்ருயிருக்குமாம்....ஹி......ஹி...... (நகைக்கிருன்)

(முகுந்தன்—பத்மாவிடம்)

## மோகனம்—திஸ்ரம்

என்னைக்கண்டு கோபம் கொண்டு
ஏசாதே பேசாதே சும்மா
இனிமேலே மாப்பிள்ளைநான் ஆசைபத்மா
நாட்டி சொன்ன யுக்தி புத்தி நன்ருயில்லையா
என்னையே கல்யாணம்
நீ செய்து கொள்ளணும்
ஏனோ வேறே மாப்பிள்ளை தேடணும்
நானும் நீயும் ஒரு ஜோடியாகணும்
நம்ம கல்யாணத்தை நாட்டியும் பாக்கணும்
உங்கப்பாவுக்கும் சம்மதம் என்தாத்தாவுக்கும் சம்மதம்
உனக்குமட்டும் சம்மதம் இல்லையா (என்னை)

பத்மா : கல்யாணமுமாச்சு, மண்ணுங்கட்டியுமாச்சு !

முகுந் : என்னைக் கல்யாணம் செய்துகொள்ள மாட்டாயா ? நாட்டி இடம் சொல்லி உம் ...பாரு அப்புறம்...

பத்மா : என்ன சூரப் புலி !

(வேணு வருகிருன்)

வேணு : அம்மா, எசமான் உங்களை உடனே வரச் சொன்னுர்.

(பத்மா போகிருள்)

முகுந் : அப்படி ! இப்போ தாத்தா நம்ம கல்யாணத்தைப் பத்தித்தான் கேக்கப் போருர்.

(பத்மா போன திசையைப் பார்த்த வண்ணம்)

நீ என்னைக் கல்யாணம் பண்ணிக்காமப் போனு, தாத்தா உன்னை லேசிலே விடமாட்டார். ஹி...ஹி...ஹி...

(நகைக்கிருன்)

(திரை விழுகிறது)

*காட்சி 5.*

## இடம்: தெரு

### பாத்திரங்கள்: முகுந்தன், நாட்டி.

(முகுந்தன் நகைத்த வண்ணம் குஷாலாக, அந்த ஸீஸனில் பிரபலமாக உள்ள பாட்டைப் பாடிக் கொண்டு வருகிருன்.)

முகுந் : ஹி...ஹி...என்ன இருந்தாலும் நாட்டி கெட்டிக்காரன்னு கெட்டிக்காரன்தான். பலே ஷோக்காத் தந்திரம் சொல்லிக் கொடுத்தான். அவன் சொன்னபடியே செய்துட்டேன். இப்போ பை நிறையப் பணம் ஆயிடுத்து.

(நாட்டி வருகிருன்.)

நாட்டி : ஹல்லோ முகுந்த்! குட் ஈவ்னிங்! ரொம்பக் குஷாலாக இருக்கிருப் போலிருக்கே?

முகுந் : ஆமாம்...ரொம்பக் குஷி. (ஜேபியிலிருந்து கை நிறையக் காசு எடுக்கிருன்.)

நாட்டி : எப்படி?

முகுந் : இந்தா பிடி. (என்று அவன் கையில், தான் எடுத்த காசைக் கொடுக்கிருன்.)

நாட்டி : பலே! இப்பத்தாண்டா எனக்கு நெ. 1 சிஷ்யனுயிட்டே.

முகுந் : நாட்டி! நீ சொல்லிக் கொடுத்தாயோ இல்லையோ, அதே மாதிரி போனேன்...

நாட்டி : உம்...

முகுந் : போனேனு? பார்த்தேன்? தாத்தா ஆந்தை மாதிரி, இப்படி கொட்ட கொட்ட முழித்துக் கொண்டு உட்

கார்ந்திருந்தார். இதென்னடா, சனியன் தொலைய மாட்டேன் என்கிறதே என்று திட்டிக்கொண்டே இருந்தேன். வாசல்லே யாரோ வந்து தாத்தாவைக் கூப்பிட்டா. அவர் எழுந்து அப்படித் திரும்பினுர் முதுகை. கப்னு கையைப் போட்டேன், ளப்னு அள்ளிண்டு வந்துட்டேன், அகப்பட்டதை!

நாட்டி : போடா போ! அகப்பட்டதை மட்டும் அள்ளிக் கொண்டு வந்தயோ? அசடே . ! அவ்வளவையும் அபக்னு தூக்கிக்கொண்டு வர்ரதுதானே ?

முகுந் : (முனகிக்கொண்டே) பார்த்தாயாடா! என்னை அச டுன்று சொல்றியே. நீதானே அசடு! அப்பவே அதை நீ எனக்கு சொல்லிக் கொடுக்கறத்துக்கென்னங்க றேன்.

நாட்டி : அது போனுல் போகட்டும். ஏதாவது இப்போதைக் குக் கொண்டு வந்தாயல்லவா! கொண்டா இப்படி. (பணத்தை வாங்கிக்கொள்கிருன்) கல்யாண சமாச் சாரம் என்ன ஆச்சு?

முகுந் : கல்யாணமா? ஹி...ஹி. (நகைத்து) கல்யாணந்தானே? பத்மாவைப் பார்த்தேன். நீ சொன்னேன்னு சமாசா ரத்தைச் சொன்னேன். நாட்டி! அவ கல்யாணமு மாச்சு, மண்ணுங்கட்டியுமாச்சு என்று சொல்ருடா. அப்புறம் நான் அவளிடம் சொன்னேன். அடி! நீ என்னைக் கல்லாணம் பண்ணிக்கோ! இல்லாவிட்டால், உன்னை இந்த வீட்டில் இருக்க விடுகிறேனு என்று பயப்படுத்தினேன். அதுக்குள்ளே தாத்தாவே அவ ளைக் கூப்பிட்டு முடிச்சுட்டார்.

நாட்டி : என்ன முடிச்சுட்டார்? அப்பவே கல்யாணம் செய் தாயிடுத்தா?

முகுந் : இல்லை. வர வைகாசியிலே கல்யாணம்.

நாட்டி : (பணத்தை பைக்குள்ளே போட்டுக்கொண்டே) கல்யாணத்திற்கு நான் வரணுமோ?

முகுந் : நாட்டி, நீ வராவிட்டா? நீதானே எனக்கு மாப்பிள்ளைத் தோழன். எப்படி?

நாட்டி : சீ...சீ! உங்க ரிலேஷன்ஸ் எல்லாம் சேர்ந்து என்னை ஒதைக்கிறதுக்கா?

முகுந் : ஏன்? எதுக்காக? சொல்லு.

நாட்டி : அட பந்தமே! மாப்பிள்ளைத் தோழனு நிக்கறத்துக்கு முறை உண்டுடா! அந்த முறை இதுவரை நமக்குள் இல்லையே.

முகுந் : இப்பத்தான் வச்சிக்கயேன்.

நாட்டி : அப்படி நாமா வச்சிக் கொள்றதில்லையடா அது!

முகுந் : சரி, பொண்ணுக்காவது தோழியா நிக்கப்படாதாடா?

நாட்டி : அட கர்மமே!

முகுந் : இதோ பார் நாட்டி! நான் எது சொன்னாலும் ஒப்புக்கொள்ள மாட்டேங்கறே! இப்போ நானே சொல்றேன். கல்யாணத்தில் சாஸ்திரிகள் என்ன சொன்னாலும் நான் செய்ய மாட்டேன். நீ எது சொன்னாலும் செய்கிறேன். அவ்வளவுதான்...

நாட்டி : அவ்வளவுதாண்டா! நான் கிட்டே இருந்து உன் கல்யாணத்தை நடத்திவைக்கிறேன். போதுமா? நான் வந்துட்றேன் கரெக்டா!

முகுந் : பருப்பில்லாமல் சாம்பாரா? நாட்டியில்லாமல் மாரியேஜா? (பணத்தை நாட்டியிடம் கொடுத்தவுடன்) புறப்படலாமா?

நாட்டி : எங்கே?

முகுந் : டீ பார்ட்டிக்கு! என் கல்யாணத்திற்கு டீ பார்ட்டி வேணுமென்றுயே...

நாட்டி : அதா? நாளைக்குப் பார்த்துக்கலாம்.

முகுந் : சரிதான் நாட்டி! எனக்கு... அடே...

நாட்டி : என்னடா அது ?

முகுந் ; நாட்டி...(பல்லைக் காட்டிக்கொண்டு) அடே நாட்டி, எனக்கு ஒரு ரூபா வேணுண்டா ?

நாட்டி : ஒரு ரூபாயா ?...எதுக்கடா அவ்வளவு ?

முகுந் : நாட்டி குடுடா ! எனக்கு வேணும்போலே இருக்குடா !

நாட்டி ; ஒரு ரூபா எதுக்கு ?

முகுந் : (பயந்து) பக்ஷணம் வாங்கி சாப்பிடடா...

நாட்டி : (கேலியாக) பச்சணம் வாங்கி சாப்பிடவா ? பேஷ், அழகாயிருக்கு. சின்னக் கொழந்தை, போடா. பேசாமே வீட்டுக்கு. நான் காசு கொடுக்கிறது... கண்ட கடையிலே போய் கடலை எண்ணெய் பக்ஷணத்தை வாங்கிச் சாப்பிட்றது...உடம்புக்கு வர்ரது... ஐயோ, அப்பாங்கறது...யாருடா கொடுத்தான்னு நாட்டி எங்கறது ! அடே, பேசாமே போறியா, இல்லையா ?

முகுந் : என் காசுதானேடா, அதிலே ஒரு ரூபாய் கொடேன்.

நாட்டி : நீ சொந்தமா சம்பாதிச்சுதோ ? திருடிக்கொண்டு வந்ததுதானே ! போடா பேசாமே வீட்டைப் பார்த்து.

முகுந் : நாட்டி, குட்ரா...

நாட்டி : சீ ! சீ ! பேசாமே போடா.

(வேகமாகப் போகிறுன்)

முகுந் : (தூரப்போய் நின்று கொண்டு) தரமாட்டேல்லியோ காசு. இதோ பாரு உன்னை. அடே நாட்டி, தீட்டி, பீட்டி, தாட்டி, சீட்டி...சீ...சீ...பயலே...

(பல்லை வலித்து வக்கணை காட்டிவிட்டுப் போகிறுன்)

(திரை விழுகிறது)



*காட்சி 6.*

**பாத்திரங்கள் :** சரஸா, முரளி, தபால்காரன்.

(முரளி, ஹாலில் டேபிள் முன்னுல் பத்திரிகை வாசித்த வண்ணம் உட்கார்ந்திருக்கிருன். சரஸா கையில் காபி கப்புடன் வந்து நின்று முரளியைக் கவனித்து)

சரஸா : காபி ஞாபகம்கூட இல்லாமல் பேப்பர்லே அவ்வளவு 'இன்டெரெஸ்ட்' போலிருக்கிறது.

முரளி : (பேப்பரை மேஜை மீது வைத்துவிட்டு சரசாவைப் பார்த்து புன்சிரிப்போடு) இல்லே சரஸா! காபி தயாராக லேட் ஆனதாலே பேப்பர் வாசிச்சேன். அதிலுள்ள நியூஸ் இண்டெரெஸ்டிங்கா இருந்ததினுலே, காபியை மறந்துவிட்டேன்.

சரஸா : அப்படி என்ன நியூஸ், எனக்கும் சொல்லக்கூடாதா? பேப்பர் படிக்க எனக்கு டைமே இல்லே!

முரளி : உனக்குச் சொல்லத்தான் இப்படி அதிலே ஆழ்ந்த கவனத்தை செலுத்தினேன். சரசா! நான் மிகவும் லக்கி. அந்தப் பெரும் லக் எது தெரியுமா? நான் உன்னே அடைந்ததே!

ஒரு விஷயம் உன்னிடம் சொல்ல வேண்டுமென்று சரஸா. நானும் என்னுடைய நண்பர்களும் பல நாட்கள் பீச்சுக்குப் போவோம். ஜாலியா மணலில் உட்கார்ந்து கொண்டு, ஏதாவது விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருப்போம். ஒரு நாள், அவரவர்கள் அவரவர் மனேவியைப்பற்றி 'டிஸ்க்ரைப்' செய்ய ஆரம்பித்து விட்டார்கள். நான் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு பேசாமலிருந்தேன். ஒருவன் என்னேக் கேட்டான், 'என்ன பிரதர்! நீங்க ஒண்ணும் சொல்லவே இல்லேயே! உங்கள் மனேவி ஏதாவது அவலக்ஷணமா? அதுதான் சொல்லப்படாது என்று இருக்கிறீர்களா?' என்று கேட்டான். எனக்கா,

ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது. என்ன செய்தேன் தெரியுமா? 'டக்' என்று உன்னை வர்ணித்து ஒரு பாட்டை எடுத்து விட்டேன். அப்படியே குமாய்ச்சிப் போயிட்டாங்க எல்லாப் பசங்களும்.

சரஸா : (சிரித்துக் கொண்டு) அது என்ன பாட்டு, நான் கேட்கலாமா?

முரளி : ஆஹா! என் சாரீரம் இன்று சரியாக இல்லை. இருந்தாலும் 'ட்ரை' செய்கிறேன். (தொண்டையைக் கனைத்துக்கொண்டு)

## கிளிக்கண்ணி மெட்டு

கரும்பு இனிக்குதென்பர்
கற்கண்டு தித்திப்பென்பர்
கனி மொழி கேளாதவர்—சரஸா
கனி மொழி கேளாதவர்

கதையில் எழுதுவார்கள்
கவிதையில் பாடுவார்கள்
கண்ணாரக் கண்டதில்லை—உன்னைப்போல்
கண்ணாரக் கண்டதில்லை—சரஸா.

சரஸா : என்னை இப்படி உபாசிப்பதை நீங்கள் இன்னும் விடவில்லையா? உங்களுக்கு இப்பொழுதெல்லாம் இதே வழக்கமாகிவிட்டது. தயவு செய்து சொல்லுங்களேன், பேப்பர்லே என்ன விசேஷம் என்று?

முரளி : உங்கப்பா சில சமயங்களிலே புத்திசாலித் தனமாகவே நடந்து கொள்கிறார். இந்தக் காப்பிக்கொட்டை கண்ட்ரோல் வரப்போறதுன்னு எப்படியோ முன்னாடியே தெரிந்து கொண்டு உங்கப்பா ஒரு மூட்டை காப்பிக்கொட்டை அனுப்பி வைத்தார். அதனாலே நம்மை மட்டும் இந்தக் காப்பிப் பஞ்சம் பாதிக்கவே

இல்லை பார்த்தாயா? இன்னிக்கு காப்பி ரொம்ப ஜோர். சரஸா, நீ, காப்பி சாப்பிட்டயோ?

சரஸா : சர்ட்டிபிகேட்டுக்கு ரொம்ப தாங்க்ஸ். நான் இங்கே வந்தது ரொம்பத் தொல்லையாயிருக்கு போலிருக்கு. நான் போகிறேன். அந்தப் பேப்பரில் அப்படியே மயங்கியிருங்கள்.

முரளி : சரஸா! இந்தப் பேப்பரில் இன்னிக்கு வந்துள்ள நியூஸ் படித்த பிறகுதான், உன்னை நான் குடத்திற்குள் ஏத்தி வைத்த விளக்காக வைத்திருக்கிறேனே; உன் அறிவுப் பிரகாசம் வெளி உலகிற்கு தெரியாமல் இருக்கின்றதே என்று வருந்துகிறேன். சரஸா, மீண்டும் சொல் கிறேன், நான் எக்ஸ்ட்ரார்டினரிலி லக்கி.

சரஸா : இதோ கேளுங்கள் நான் சொல்வதை. எனக்கு இந்த துர்ப்பாக்கியம் வேண்டவே வேண்டாம். தயவு செய்து சொல்லுங்களேன். உம் மாட்டேளோ? ஆமாம். வரவர உங்களுக்கு என்னிடம் ஒன்றும் சொல்லப் பிடிப்பதில்லை. மேலுக்கு என்னைக் கண்ட வுடன் அப்படி இப்படின்னு சொல்லி எல்லாவற்றை யும் மறைத்து விடுகிறீர்கள். வேண்டாம் போங்கோ. நான் உள்ளே போகிறேன். உங்கள் நிம்மதியைக் குலைப்பானேன்?

முரளி : சரஸா! அடேயப்பா. உனக்குக் கோபம் இவ்வளவு வருமென்று எனக்குத் தெரியாதே! ஆனால் நீ கோபித் துக் கொண்டாலும் அதுவும் மிகவும் அழகாகத் தோன்றி என்னை இன்னும் பன் மடங்கு பரவச மடையச் செய்கின்றது. அடேயப்பா! ரௌத்ரா காரம் ஜாஸ்தியாகி வருகிறதே! எங்கே, கொஞ்சம் சிரி. எங்கே கொஞ்சம்...அப்பாடி! வந்துவிட்டதே சிரிப்பு! சரஸா! பேப்பரிலே ஒரு வெளியூர் மாதர் சங்கத்தைப் பற்றி ஒரு நியூஸ் வந்திருக்கு. அதுமாதிரி இந்த ஊரிலேயும் ஒரு சங்கம் இருந்து, அதிலே நீ

சேர்ந்து, உன் அறிவைப் பயன்படுத்தி, பொது நலனில் ஈடுபட்டால் எனக்கு எவ்வளவு பெருமை.

சரஸா ; அதெல்லாம் எதற்கு நாதா? நம் நாட்டுப் பெண் களுக்கு நமது நாட்டு தருமப்படி பெற்றோரிடத்தில் நடந்துகொள்ள வேண்டிய முறையும், யௌவனத்தில் புருஷனோடு வாழவேண்டிய முறையும், கற்பைக் காப்பாற்றிக் கொள்ளும் நேர்மையும் ஒவ்வொருவருக்கும் கட்டாயக் கல்வியாகப் போதிக்கப்பட்டால் சமூக முன்னேற்றத்திற்கு எவ்வளவு உதவியாக இருக்கும். தவிரவும், சிசுக்களை சம்ரக்ஷிக்கும் முறைகள் நன்றாய் போதிக்கப்பட்டால் சிசுமரணம் எவ்வளவு குறையும்?

முரளி : கண்ணே, சரஸா. மேல் நாட்டு நாகரீகப்படி இப்போதிருக்கும் பெண் கல்வியை நீ படித்து நம் நாட்டுப் பெண்களுக்கு அவசியமானதை அறிந்து ஆராய்ந்து அனுஷ்டிக்கும் உனது உயர்ந்த அறிவை எப்படிப் புகழுவேன்? சரஸா! பகவான் நம் இருவரையும் இணைத்து வைத்து விட்டார். நமது வாழ்க்கை சந்தோஷகரமாகக் கழிய அதே பகவான்தான் அருள் புரியவேண்டும். அதுசரி, நாம் இருவரும் விவாகம் செய்து கொண்ட புதிதிலே, நாம் இருவரும் எது போலேயோ இருக்க வேண்டுமென்று சொன்னாயே, நினைவிருக்கிறதா? என்ன அது? (யோசித்துக்கொண்டிருக்க, சரஸா, 'மலரும் மணமும்போலே, பாட்டை எடுக்கிறாள்)

முரளி : மலரும் மணமும் போலே—நாம்
மானிலத்தில் வாழ்வோமே

சரஸா : நாத கீதம் போலே—நாம்
நானிலத்தில் வாழ்வோமே
ஆருயிரே உயர் ப்ரேமையினால்

முரளி : ஈருடல் ஒருயிர் போலினிதாய்
இன்பமேவிடும் வாழ்வினையே

சரஸா : என்று காண்போம் நாமினியே.

இவ்வளவு அறிவான பெண், குடும்பத்தைத் தாங்கி நடத்துவதைப் பார்க்கக் கொடுத்து வைக்கலையே எங்க தாத்தா.

சரஸா : ஆமாம்! நீங்கள் உங்கள் தாத்தாவுக்கு எழுதின கடிதத்துக்கு இன்னும் பதிலைக் காணோமே.

முரளி : வராமற் போகாது. அதுவும் அனுகூலமான பதில் வருமென்பது நிச்சயம்.

சரஸா : என்னமோ பார்க்கலாம்!

முரளி : இல்லை சரஸா. நிச்சயமாக நாளையே செக் வந்து சேரப்போகிறது பார்.

(தபாற்காரன் "ஸார், தபால்" என்று ஒரு கடிதத்தைக் கொடுக்க, அதை ஆவலுடன் வாங்கி உடைத்த வண்ணம்)

ஹல்லோ சரஸா! பாரு. நான் சொன்னேனா இல்லையா? தாத்தாவிடமிருந்து கடிதம் இன்றே வந்துவிட்டது. தாத்தா என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்!

(கடிதத்தை வாசிக்கிறான். அவனது முகத்தில் திடீரென மாறுதல் ஏற்படுகிறது. கடிதத்தை முழுதும் வாசித்து முடிப்பதற்குள்)

ஹா! தீர்ந்தது என் பாடு. (என்று பெருமூச்சு விட்ட வண்ணம் நாற்காலியில் சாய்கிறான்)

(ஐயோ நாதா! என்று அலறி சரசா முரளியின் கையிலிருந்து நழுவி விழுந்த கடிதத்தை எடுத்து

வாசிக்க, அவளது முகமும் திகிலடைந்த தோற்றத்தைக் கொள்கிறது)

"என் வீட்டிற்குள் நீ இனி அடியெடுத்தும் வைக்கக் கூடாது. இதோ, உனக்கும் எனக்கும் தீர்ந்தது. நீ ஒரு பேரன் இல்லையென்று எண்ணி எள்ளும் தண்ணீரும் விட்டுவிட்டேன்."...ஐயோ, இனி என்ன கதி ! (என்று வாய்விட்டுக் கதறுகிருள்.)

(திரை விழுகிறது)

*காட்சி 7.*

இடம் : தெரு

பாத்திரங்கள் : வேணு, முகுந்தன், நாட்டி

வேணு : (தனக்குள்) இந்த கனபாடிகள், 'சீத்தாராம், சீத்தாராம்' என்று சொல்லிச் சொல்லி, ஜமீன்தார் வீட்டில் அவன் பூஜை செய்கிற சாமியை, விக்ரகத்தை விட்டே ஓட்டிவிட்டான். இந்தக் கனபாடி பெரும் பூனை. ஏதோ பூஜை செய்ய வந்தேன்னுன். மெள்ள மெள்ள தன் பொண்ணை முகுந்தன் கழுத்திலே கட்டிட்டான். ஜமீன்தாரையும் தன் வலையிலே போட்டுட்டான். சீத்தாராம், சீத்தாராம்னு சொல்லிக்கிட்டு இவன் திரியறது, ஜமீன்தாரு பணத்துக்குத்தான். இப்போ ஜமீன்தாரு, பழைய ஜமீன்தாரா இல்லே. ஜாடாவா மாறிப்பூட்டாரு. இந்தக் கனபாடி வச்சது சட்டமாயிடுத்து. ஊட்டிலே தங்கக் கம்பியாயிருந்த முரளி எசமான் போயாச்சு. இந்த முகுந்த் சுத்தப் பித்துக்குளி. காவாலிப் பசங்கக்கூடச் சேர்ந்துகிட்டு நாசமாப் போவுது. இந்த ஜமீந்தாரு வீட்டு சேவகமே பெரிய தொல்லைப் பிடிச்ச வியாபாரம். அவருபார்த்து, 'இந்தா பாரு, வெள்ளைக் காக்கை' ன்னு, 'ஆமா எசமான், பால் போலிருக்குது' எங்கணும்.

குரங்கு போலிருக்கிற பொம்பிள்ளையைப் பாத்து கிளி போலே இருக்கான்னு, 'புத்தி, எசமான், இவளை விட அளகான பொம்பிள்ளை ஊரிலேயே கிடையாது' ன்னனும். சீ! சீ! இந்த வவுத்துக்காக விடிஞ்சா எவ்ளோ பொய் சொல்லவேண்டியிருக்குது! அது எப்படியானாலும் போகுது. இந்தக் கனபாடி, முகுந்தன், நாட்டியோ, சீட்டியோ, அந்தப் பயல் இவ்வளவு பேரையும் கண்டா என் வவுத் தெரிச்சத் தீர என் மனசிலே தோண்றதை சொல்லணும்னு இருக்கேன். இந்தக் கனபாடி எவ்ளோ அக்ரும்பு செய்ரான். கதை சொல்றேன்னு பொம்பிள்ளைங்க கூட்டத்திலே போய் உட்கார்ந்திர்ரான். வாயிலே மந்த்ரம், மனசிலே தந்திரம். பாக்கறது பொம்பிள்ளை. சாஸ்த்ரம் கீத்தரம்னு பேரைச் சொல்லிக்கிட்டு, எல்லோருக்கும் போடப் பாக்கரான் ஐயா, பெரிய நாமம். அதோ முகுந்தன் வர்ராப்லே இருக்குது. அவனுக்குப் புத்தி கொஞ்சம் சொல்றேன்.

(ஒரு புறத்திலிருந்து முகுந்தன் வருகிறான், கலியாண கோலத்துடன்)

முகுந் : இந்த நாட்டி சொல்றதெல்லாம் ரொம்ப நன்றாயிருக்கு. ஆனால் அவன் சொல்றதைச் செய்றது கஷ்டமாயிருக்கு. ராதாவின் நகைகளை அழுத்திக் கொண்டு வந்துவிடு என்கிறான். அவளருகில் எப்போதும் தாத்தா இருந்துகொண்டே இருக்கார். எப்படி நான் நகையை எடுக்கறதுங்கறேன்? நாட்டி வரேன்னான் இந்த இடத்துக்கு. அவனிடம் புது யோசனை கேட்கலாம்.

வேணு : முகுந்த் எசமான்!

முகுந் : அடேடே...நீ எங்கேடா வந்தே?

வேணு : நீங்க வரவக்கிறீங்களே, எசமான்.

முகுந் : அதென்னடா அது? சும்மா லொட லொடங்காதே. சமாசாரத்தைச் சொல்றதானுச் சொல்லு. இல்லாவிட் டால் போடா ராஸ்கல்.

வேணு : அதென்ன எசமான் இஸ்கோல்? கோவிச்சுக்கிறு நீங்க. பொறக்கறப்பவே பகவான் மூளையிலேருக் கிறதை வெளியிலே எடுத்துட்டான்.

முகுந் : நான்ஸென்ஸ்.

வேணு : எசமான், நீங்க நல்லாருக்கணும் என்கிறது என் கோரிக்கை. பெரிய எசமான் கண் மூடறத்துக் குள் ளாறவே இப்படிக் குட்டிச்சுவராய்ப் போறீங்களே.

முகுந் : நான் மனுசனுத்தானேடா இருக்கேன்? சுவரானு, பேச முடியுமா இப்படி?

வேணு : நீங்க அந்த நாட்டியை ஊட்டிலே வரவிட்றது சரியில் லேங்க. வீணு கெட்டுப் போவீங்க...அவன் வைதிக சாமி பிள்ளே. இப்படி சிகரெட், சாராயம், கிராப்னு அவன் நாசமாப் போருன். நீங்க அவனே உட்டுடுங்க.

முகுந் : உனக்குத் தெரியாதுடா அவன் பெருமை. எனக்குத் தெரியாத எவ்வளவோ சமாசாரம் அவனுக்குத் தெரி யுண்டா! தெரியுமா?

வேணு : வாஸ்தவம். அவனுக்கு மத்தவங்க குடியைக் கெடுக்கத் தெரியுது. உங்களுக்கு அது தெரியாது தான்.

முகுந் : இடியட். உன் லெச்சர் வேணும் போ. போறையா, உதைக்கட்டுமா? நாட்டி வந்தால் அவனிடம் சொல்லி விடுவேன்.

வேணு : எப்படியானுப் போங்க. நான் போறேன். (தனக்குள்) பாவம், புத்தியில்லாம கெட்டுப் போவுது. (போகி ருன்)

முகுந் : அட வேணு. இங்கே வா.

வேணு : எசமான்.

முகுந் : அடே ! தாத்தா வீட்டிலே இருக்காரா பார்த்துவிட்டு வாயேன், நீ சொல்றபடி கேக்கறேன்.

வேணு : (சந்தோஷத்துடன்) அப்படியா, சரி.

(போகிறன். மற்ரேர் பக்கத்திலிருந்து ஈவ்னிங் டிரெஸ்ஸில் நாட்டி வருகிறன்)

முகுந் : ஹல்லோ நாட்டி!

நாட்டி : குட் ஈவ்னிங் முகுந்த். அடே ! உனக்கு எத்தனை தடவை சொல்வது, சுத்த இடியட்ரா நீ! குட் ஈவ் னிங்னு சொல்லிட்டு அப்புறம்...

முகுந் : தெரியும் ! இப்போ மறந்துட்டேன். (ஜிலேபியை எடுத்துத் தின்ன ஆரம்பிக்கிறன்)

நாட்டி : அட எழவே. இதென்னடா குழந்தை மாதிரி ஜிலேபி தின்கிருய் ?

முகுந் : குழந்தைதான் ஜிலேபி திங்குமா ? குழந்தை ஜாங்கிரி திங்கும். பெரியவா ஜிலேபி திம்பா.

நாட்டி : ஏது, ரொம்ப தேர்ந்து போயிட்டயே...

முகுந் : (பல்லை இளித்தவண்ணம்) ஹி...ஹி ! உங்கிட்டே கத்துண்டது தானேடா ?

நாட்டி : அது சரி, நான் சொன்னதைச் செய்தாயா ?

முகுந் : (முனகிக் கொண்டே) அதுதான் எங்க பத்மா பாரு. அவ எப்பப் பார்த்தாலும் ராதாவை சுத்தி வந்துண்டே இருக்காளே.

நாட்டி : சீச்சி ! மடசாம்பிராணி. உனக்குச் சிநேகிதனுக வந்து வாய்த்தேனே நான்.

முகுந் : அடே நாட்டி! நாட்டி! என்மேலே கோபமா?

நாட்டி : எல்லாம் குணந்தான். இப்போ பணத்துக்கு வேறே வழி சொல்றேன் கேள்.

முகுந் : அது என்னடா அது ?

நாட்டி : தாத்தா பெட்டிச் சாவியை...

முகுந் : (ராகத்துடன்) அது நடக்காது......டா......அப்பா ...

நாட்டி : அப்படியானு. நான் சொல்றபடி செய். இதோ இந்த மெழுகைக் கொண்டு போ. இரும்புப் பெட்டியின் வாய்க்குச் சரியாக வைத்து, அழுத்திக் கொண்டு வா. அப்புறம் 'மாஸ்டர் கி,' எஜமான் சாவி செய்து தந்துட்றேண்டா.

முகுந் : நாட்டி, நல்ல யோசனேடா! நான் ஒண்ணு சொல்றேன். அதை கேட்கமாட்டே ?

நாட்டி : சொல்லு.

முகுந் : நாட்டி. நீ ஒரு பூட்டு தயார் செய்ற கடை வச்சுடேண்டா.

நாட்டி : நம்ம சினேகிதம் மட்டும் நன்ருக நீடிச்சிருக்கட்டும். பூட்டுக் கடை மட்டுமில்லே. இன்னும் எத்தனேயோ ஒண்டர்ஸ் செய்துடமாட்டேனு ?

முகுந் : ஆமடா நாட்டி. நாட்டிஸ் நைந்த் ஒண்டர், நாட்டியின் ஒன்பதாவது அதிசயம் என்று ஏண்டா வரலே?

நாட்டி : நீ மட்டும் மெழுகை சரியாக அழுத்திக் கொண்டு வா, அப்புறம் பாரேன். போய் சீக்கிரம் வந்துடு.

(திரை விழுகிறது)

## காட்சி 8.

இடம் : ஜமீன்தார் வீட்டில் ஓர் அறை

பாத்திரங்கள் : ராதா, கனபாடிகள், முகுந்தன்.

(ராதா உல்லாசமாகக் கண்ணுடி முன்னுல் நின்று கொண்டு தலேவாரி பின்னிக்கொண்டிருக்கிருள்)

ராதா : ஆஹா! இந்தத் தலை மயிர் எவ்வளவு அழகாயிருக்கிறது. எவ்வளவு நீளம் கருகருவென்று கருத்திருக்கின்றது. இதற்கு தைலம் தடவிப் பின்னல் போட்டு முடிந்துகொள்ளாமல் இருப்பாளா? சீப்பு என்ன வேண்டியிருக்கிறது என்கிறார் ஒருவர். வாசல்லே போய் நிற்காதேடி, ஜடை போட்டுக் கொள்ளாதே, பூவை கையாலேயும் தொடாதே, நாலு பேர் இருக்கிற இடத்துக்கு வராதே, அப்படி இப்படீன்னு சொல்றது சகிக்கவே முடியவில்லை. உயிரைக்கூட விட்டுவிடலாமென்று தோன்றுகிறது. பத்மாவை யாரும் ஒரு வார்த்தைகூட சொல்வதே இல்லை. என்னைவிட அவள் என்ன அழகா? யார் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும், நான் என் இஷ்டப்படிதான் நடக்கப் போகிறேன்.

(பூவைத் தலையில் வைத்துக்கொண்டு, நெற்றிக்கும் சாந்துப் பொட்டு வைத்துக் கொள்கிறாள். அந்த சமயத்தில் அறைக்குள் கனபாடிகள் நுழைகிறார்)

கனபாடி : (தனக்குள்) அடாடா! என்ன அழகு! இந்த ராதாவின் இந்த தலைக்கு இந்த ஜடை போட்டது எவ்வளவு ஷோக்காக இருக்கு. ஐயோ பாவம். இப்படிப்பட்ட சுந்தரிக்குச் சின்னஞ் சிறு வயதிலேயே அமங்கலித்துவம் வந்து சேரவேண்டுமா? கிரகசாரம். கிரகசாரம். சித்தாராமா! பச்சைக் குழந்தையாக இருக்கிற போதே, கல்யாணம்னு என்னன்னுகூடத் தெரியாமே இருக்கிறபொழுதே, இதுக்குக் கழுத்துக்குப் பாரமாத் தாலியைக் கட்டித் தொலைச்சுட்டா. அதென்னமோ, சொல்றுளே, டப்பாடு ஜ்ரமாமே, அது வந்து இவளோட ஆம்படையான் அல்பாயுசா போயிட்டான். அநாதியா இருந்த இந்தப் பொண்ணை நம்ம ஜமீன்தார் எடுத்து வளர்த்து வருகிறார். பாவம்... சின்னஞ் சிறிசுதானே! ஜடை, பூ, எல்லாம் ஆசையாயிருக்கு. போகட்டும். சித்தாராமா!



ராதாவும் கனபாடிகளும்



கனபாடிகளும் முகுந்தனும்

(வெளிப்படையாக இரும, உடனே ராதா திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கிருள்)

கனபாடி : யாரம்மா அங்கே, ராதாவா ? எங்கே இப்படிப் பக்கத் திலே வா அம்மா, பார்க்கலாம்.

ராதா : ஏன் கனபாடிகளே ?

கனபாடி : வாயேன் இப்படி !

ராதா : (பக்கத்தில் வந்து நிற்கிருள்) இதோ வந்தேன். என்ன ?

கனபாடி : (கண்ணை நன்ருகத் திறந்து பார்த்து) இதென்னடி, அநியாயம். ஐய்யய்யோ ! குடி மோசம் போச்சே ! அட கர்மமே !

ராதா : (கலவரத்துடன்) என்ன குடி முழுகிப் போயிடுத்து ? யாருக்கு என்ன ஆச்சு ? சொல்லுங்கோ சீக்கிரம் !

கனபாடி : சீத்தாராமா. யாருக்குன்னு கேக்கறே ? ஜாதிக் கட்டுப்பாடே போயிடுத்தே! நாலுபேர் பார்த்தா... ஐய்யய்யோ ! ஜமீன்தார் பேரு சந்தி சிரித்துப் போயி டுமே. சீத்தாராமா...

ராதா : ஐயோ ! எனக்கு ஒன்றும் புரியவில்லையே. சமாசாரத் தைச் சொல்லுங்களேன்.

கனபாடி : உனக்கேன் புரியப் போகிறது? அமங்கலிப் பொண்ணு, தலை வாரிக்கிறதாவது ? பூ முடிஞ்சிக்கிறதாவது ? போதாதுன்னு நெத்திக்கு வேறே ! ராம...ராமா !... கர்மம், கர்மம் !

ராதா : பூ வைத்துக் கொள்வது தப்பா ?

கனபாடி : அமங்கலி பூ வைத்துச் சிங்காரித்துக் கொண்டா, ஊர்க்காரா பார்த்து, சும்மா இருப்பாளோடி பைத்யமே ! பூவை எடுத்துத் தூர எறி.

ராதா : (துக்கத்துடன்) மாட்டேன். ஏன் எறியணும்! நீங்கள் வீட்டிலிருக்கிறவா எல்லாம் ஒண்ணுச் சேர்ந்து என் வயிற்றெரிச்சலை இப்படிக் கொட்டிக்கொள்றேளே!

கனபாடி : அட ராமா! நல்லதைச் சொன்னு...

ராதா : போதும். போதும். எங்க தாத்தா பணத்தைச் சூறையாடி, உங்க பொண்ணுக்கு, வேணுங்கற நகையெல்லாம்...

கனபாடி : என்ன...என்ன சொன்னே? நீ மாத்திரம் எங்கிருந்து வந்திட்டயோ? தாத்தா வயித்திலே பிறந்த பேத்தி கெட்டுப் போகிறதோ? அட அமங்கலிப் பொணமே!

ராதா : இதோ, இனிமேலே அமங்கலின்னு இன்னொரு தரம் சொன்னேளோ, தாத்தாவிடம்...

கனபாடி : ராதா! பெரியவா புத்தி சொன்னுல் இப்படி உடனே கோவிச்சுக்குவாளோ? உன்னிடம் ஒரு சமாசாரம்னு பேசணும். அடி ராதா, என்னவோ சொல்ல வந்தேன். மறந்துட்டேனே. (யோசிக்கிருர்).

ராதா : நானும் உங்களிடம் ஒரு சேதி கேட்கணும்னு நினைத்தேன். பாருங்கோ! உங்க பத்மாவுக்கு என்னமோ அவசர அவசரமாக, நினைச்சதுமே கலியாணம் செய்து வைத்து விட்டேள்.

கனபாடி : ஆமாம். உனக்கென்ன அதைப்பத்தி?

ராதா : எனக்கா? இவ்வளவு நாளாகப் பத்மாவுக்கும் என்னைப் போலே கழுத்திலே ஒண்ணும் இல்லாமல்தானே இருந்தது? இப்பொழுது முகுந்தனைக் கொண்டு ஒரு தாலி கட்டச் செய்துவிட்டேள். எனக்கும் ஒரு நல்ல மாப்பிள்ளையாக...

கனபாடி : ராம...ராம...சீத்தாராமா! ராதா, என்ன, பைத்தியம் முத்தறதா? அமங்கலிக்குக் கல்யாணமா? பேஷ், பேஷ்ன்னேன்.

ராதா : (அழ ஆரம்பித்து) முந்தியே சொன்னேனேல்லியோ, திரும்பவும் அமங்கலின்னு...

கனபாடி : ராதா! ஏதோ வாய் பிசகிச் சொல்லிவிட்டேன். கோவிச்சுக்காதே. இப்படி வா அம்மா, பக்கத்திலே.

ராதா : கனபாடிகளே...

கனபாடி : அம்மா! உனக்கு சின்ன வயசிலேயே கல்யாணம் ஆயிடுத்து. அப்புறம், உனக்குத் தாலிகட்டினவன் செத்துப் போயிட்டான். அதனாலே, உனக்கு இன்னொரு தரம் கல்யாணம் செய்யக் கூடாது. அதனாலே நீ தலையிலே பூ வைத்துக் கொள்ளப்படாது. ராமா...!

ராதா : அப்படி எல்லாம் என்னைக் கட்டுப்பாடு செய்தா நான் கேட்கமாட்டேன்.

கனபாடி : ஐயோ! இந்த அழகான தேகம் காட்டுப் பூவாக, அனுபவிப்பாரற்று வீணாகப் போகிறதே. (பெருமூச்சு விட்டு விட்டு) ராமா! ராதா! இதோ இப்படி கண்ணாடி முன்னாலே வா. உன் அழகைப் பார்க்கலாம். பூ வைத்தால் கண்ணாடியிலே எப்படி இருக்குன்னு பார்க்கலாம்.

ராதா : உம்! (உற்சாகத்துடன் கண்ணாடி முன் சென்று நிற்கிறாள். அவள் பின்னால் கனபாடிகள் சென்று)

கனபாடி : ஆஹா! வாஸ்தவமாகவே ரொம்ப நன்றாக இருக்கிறது. அடடா! பிரம்மாவுடைய சிருஷ்டியே சிருஷ்டி! இதனுடைய சுகத்தை (நாலா புறமும் பார்த்துக்கொண்டு) ராதா, நீயும் சுகமென்பதையே இன்னதென்று அறியமாட்டாயே!

ராதா : என்ன சொல்றேள்?

கனபாடி : (கனபாடிகள் சட்டென அவளை அணைத்துக் கொள்கிறார். ராதா ஒன்றும் புரியாமல் மெய்ம்மறந்து நிற்கிறாள். அது சமயம் திடீரென முகுந்தன் தோன்றி)

முகுந் : பலே கனபாடிகளே...!

கனபாடி : (திடுக்கிட்டுத் திரும்பி) பாவன ராமா, பதித பாவன ராமா! பாவன ராமா... (என்று தலைக்கு மேலே தன் இரு கைகளையும் உயர்த்தி, தாளம் போட்டுக் கொண்டே கண்களை மூடிப் பாடியவண்ணம், நின்ற இடத்திலேயே சுற்றுகிறார்)

முகுந் : கனபாடிகளே...! (என்று கத்துகிறான்)

கனபாடி : (பாட்டை நிறுத்தி, ஒன்றும் சொய்யாதவர்போல) என்னடா அது ...?

முகுந் : (ராகத்துடன்) என்ன...டா...அ...து...உ...உ உ... ...என்னடா... அ...அ...அ...

கனபாடி : சீ, அதிகப் பிரசங்கி, வாயை மூடு.

முகுந் : (வாயை மூடிக்கொண்டே பேசுகிறான்) கனபாடிகளே...! ஏது இந்த அறைக்குள் வந்தாப்பலேயோ ?

கனபாடி : நீ என்னடா கேக்கறது ?

முகுந் : (வாயிலிருந்து கையை எடுத்துவிட்டு) ஹி...ஹி...! இல்லே...ராதாவுக்கு ஏதோ உதவி...இல்லே... ராதாவை ஆலிங்கனம் செய்து...

கனபாடி : சீ, ராஸ்கல். இரு உன்னை, தாத்தாவிடம் சொல்லி! வாய்க்கொழுப்பு மிஞ்சறதோ ? இதோ பாரு.

(போகிறார்)

முகுந் : ஹல்லோ ராதா, இப்படி வா!

ராதா : என்ன முகுந்த் ?

முகுந் : ஐயோ! என்னமோ கூப்பிடறத்துக்குள்ளேயே நாணிக் கோணிக்கிறயே! எங்க மாமனார் கனபாடிக் கிழம்...உம்...ஏது? ஜடை கிடை, பூவு கீவு, பொட்டு கிட்டு, எல்லாம் ரொம்ப குஷாலாயிருக்கே ?

ராதா : குஷாலென்ன ? பத்மா மட்டும் வைத்துக் கொள்ள லாம்போலிருக்கிறது. நான் வைத்துக்கொண்டால்

ஒவ்வொருவரும் கிண்டல் செய்ய ஆரம்பித்து விட்டூ....

(கண்ணைக் கசக்குகிருள்)

முகுந் : இதோ, நீ அழ ஆரம்பிச்சா எனக்கு அழுகை வந்து விடும்போலிருக்கு. ஹூஹூம் ! (அழ முயலுகிருன்)

ராதா : கேலி செய்யாதே முகுந்த் ! என்ன சமாச்சாரம்னு சொல்லு, நான் போகணும்.

முகுந் : ராதா ! இப்படி வா ! எங்க மாமனுர் இருக்காரே, அது ஒரு கிழப் பெருச்சாளியாம். எல்லாத்தையும் தோண்டப் பாக்கிறதாம். அதைப் பக்கத்திலேயே அண்டவிடப்படாதாம். அப்படீன்னு நாட்டி சொன்னுன். இப்போ நான் சொல்றேன். நீ அப்புறம் சொல்லுவே. தெரிஞ்சுதா ? உஷார்.

(போகிருன்)

(திரை விழுகிறது)

## காட்சி : 9.

### இடம் : ரோடு.

பாத்திரங்கள்: நடராஜன், வேணு.

(நடராஜனுக்கு எதிரில் வேணு வந்து நிற்கிருன்)

வேணு : சாத்திரி சாமி மகன் சாமி ; வாங்க ! சௌக்கியந் தானுங்களா ?

நாட்டி : என்ன வேணு ! எங்கே இப்படி ?

வேணு ; சும்மாத்தான் இப்படி வந்தேனுங்க.

நாட்டி : என்ன வேணும் உனக்கு ?

வேணு : எனக்கு என்னுங்க வேணும் ? பொடி மட்டைக்கு ஒரு காலணு.

நாட்டி : காலணுவா? இந்தா. (ஒரு ரூபாயை அவன் முன் எறிந்து) எடுத்துக் கொள்ளடா வேணு.

வேணு : (ஆச்சரியத்துடன் அப்பணத்தையும் நடராஜனையும் பார்க்கிருன்)

நாட்டி : என்னடா பார்க்கிருய்? இதோ இன்னெரு ரூபாய். (மற்ருெரு ரூபாயை எறிகிருன்). சும்மா போறவங்க வரவங்ககிட்டே, இனிமேலே பொடிக்கு என்று பல்லேக் காட்டாதே. பெரிய பானையிலே ஸ்டாக் செய்து கொள்.

வேணு : அப்பனே! நீ தானப்பா தாராளப் பிரபு. கலியுக வெங்கடாசலபதி நீ தானய்யா! உன்னைப் போல் தானய்யா இருக்கணும் மனுசங்க...

நாட்டி : ரொம்ப ஸ்தோத்திரம் வேண்டாம். போய் வருகிறேன், உஷார். (போகிருன்)

வேணு : அட திருட்டுப் படவா! கஷ்டப்பட்டாவில்ல தெரியப் போவுது பணத்து அருமை. இவன் அப்பன் கட்டி வந்த மூட்டையா இந்தப் பணம்? அப்படி இருந்தா இப்படி அலட்சியமா ரூபாயைப் போடுவானு இவன்? முகுந்தன் காசு திருடியாறது, இவன் தின்னு கொழுக்கிறது. என்ன நியாயம் ஐயா இது? இந்த நாட்டிக்குச் சமயம் பார்த்து, பாடம் சொல்லிக் கொடுக்கணும். என் தடிக்கம்புக்கு என்னிக்குப் பூசை கிடைக்கப் போறதோ தெரியலே. பார்க்கலாம் போகப் போக.

(போகிருன்)

(திரை விழுகிறது)

**காட்சி : 10.**

**இடம் : ஏழைக் குடிசை.**

**பாத்திரங்கள் :** முரளி, சரஸா, பையன் சந்துரு.

(ஒரு படுக்கையில் முரளியின் பையன் சந்துரு நோயுடன் படுத்திருக்கிருன். பக்கத்தில் சரஸா அமர்ந்திருக்கிருள்)

சரஸா : கண்ணே சந்துரு, அழதேடா. கொஞ்சம் இரு. இதோ அப்பா வந்துடுவார். வர்ரபோது பழம், பிஸ்கோத்து எல்லாம் கொண்டு வருவார்.

(குழந்தையைத் தூங்க வைக்கிருள். வறுமைத் தோற்றத்துடனும், சிறிதே வளர்ந்த தாடி மீசையுடனும், அலங்கோலமான தலையுடனும் முரளி வருகிருன்.)

முரளி : சரஸா, சந்துருவுக்கு என்னமாயிருக்கிறது ?

சரஸா ; உஸ் ! (என்று ஜாடை காட்டிவிட்டு, சற்றுமுன்னுல் வந்து) சந்துரு இப்பத்தான் கண்ணை மூடினுன். சற்று நேரம் தூங்கட்டும். அது சரி, நீங்கள் எங்கே போய் வந்தீர்கள் ?

முரளி : (சிறிது துக்கத்துடன்) கண்ணே, நேரே டாக்டர் வீட்டுக்குத்தான் போனேன். அவர் எங்கோ வெளியில் போயிருந்தார். வெகு நேரம் காத்திருந்து பார்த்தேன். அவர் வருவதாகக் காணும். அதற்குள் குழந்தை என்னமாயிருக்கிருனே என்ற நினைவு வந்தது. டாக்டரை இங்கேவரச் சொல்லி ஒரு நோட் எழுதிவைத்து விட்டு ஓடியே வந்தேன்.

சரஸா : மருந்துச் செலவு, டாக்டர் செலவு, வீட்டு சாமான் எல்லாவற்றிற்கும் என்ன செய்யப் போகிறீர்கள் ?

முரளி ; (துக்கத்துடன்) ஐயோ சரஸா ! உனக்கு என்ன பதில் கூறுவேன் நான். இப் பாவியை கல்யாணம் செய்து கொண்டதிலிருந்து உனக்கு எத்தகைய கஷ்டங்கள் ஏற்படுகின்றன. நீ செல்வவந்தர் வீட்டில் பிறந்து, செல்வவந்தர் வீட்டுப் பையனை மணந்தும், உனக்கு அவதிப்படவேண்டி இருக்கிறதே, சரஸா !

சரஸா : நான் ஒன்று கேட்டால் நீங்கள் ஒன்று சொல்லி மனதைத் துன்பப் படுத்திக் கொள்கிறீர்களே. மனமொத்த மணம் செய்துகொண்டோம். இனி என்ன வந்தாலும் இன்பமோ, துன்பமோ தங்களுடன்

அனுபவிப்பதே என் போன்ற பெண்களுக்கு அழகு. நீங்கள் பணத்திற்கு...

முரளி: (துக்கத்துடன்) சரசா! பணமா? ஐயோ உன் நகைகளில் அனேகமாக ஒன்று விடாது அனைத்தையும் எடுத்து விற்றுவிட்டது. அது போதாதென்று நம் அருமைச் சந்துருவின் நகைகளில் பலவற்றை அவன் தூங்கும்போது அவனறியாமல் திருடனைப் போல் எடுத்து அடகு வைத்தேன், பாதகன் நான்.

சரஸா: நாதா! ஏற்கெனவே புண்பட்டிருக்கும் உங்கள் மனதை இப்பழைய சங்கதிகளை மறுபடியும் நினைவு மூட்டிக்கொண்டு வேதனைப் படுத்துகிறீர்களே! நடக்க வேண்டியதைப் பாருங்கள்.

முரளி: (அதிக துக்கத்துடன்) நடக்கவேண்டியதென்ன? இனிக் கடன் கொடுப்பார் யாரையும் காணோம். இவ்வளவு நாள் இருந்த பணமெல்லாம் செலவழிந்தது பெரிதல்ல. குழந்தை உடம்பு தேவலையானால் போதுமே. இந்தத் தாத்தாவின் மனது இப்படியா கல்லாகப் போகும்! வன்னெஞ்சமுள்ள பாவி!

சரஸா: ஐயோ, அவர்களை ஏன் வைகிறீர்கள்? எல்லாம் நம் விதி.

(வாசலில் மோட்டார் வந்துநிற்கும் சத்தம் கேட்கிறது, முரளி டாக்டரைப் போய் அழைத்துவருகிறான்.) அவரது மருந்துப்பையை வாங்கிவைக்கிறான். டாக்டர் குழந்தையைப் பரிசோதிக்கிறார். முரளியும், சரஸாவும் கவலையோடு டாக்டர் முகத்தைப் பார்க்கிறார்கள். டாக்டர் முரளியை ஒரு பக்கமாக அழைத்துப்போய்)

டாக்டர்: ஸார்! இது ரொம்ப...

முரளி: ஆ......!

டாக்டர்: மிஸ்டர் முரளி! இது ரொம்ப ஸிவியர் டைப் ஜுரம். ரொம்ப விலையுயர்ந்த மருந்து 'இன்ஜெக்ட்' செய்ய

வேண்டும். இல்லாவிட்டால் இவ்வியாதி சட்டென்று குணப்படாது.

முரளி : அதைச் செய்யுங்கள்.

டாக்டர் : உம் ! அந்த மருந்து இப்போ கைவசமில்லை. வாங்கிக் கொண்டு சாயந்திரம் வருகிறேன்.

முரளி : சரி, செய்யுங்கள்

டாக்டர் : (சட்டைப் பைக்குள் கையை விட்டுக்கொண்டு காலை ஆட்டிய வண்ணம் முகத்தைச் சுளித்து)

உம், சரி என்றால்? இப்போ அவசரமாக வரவேண்டும் என்றுள்ள உங்கள் குறிப்பைப் பார்த்தேன். அப்பத் தான் என்னுடைய கார் நம் வீட்டுப் பொம்மனாட்டிக ளுக்காக எங்கேயோ போச்சு. உடனே ஒரு வாடகை மோட்டார் அமர்த்திக்கொண்டு வந்தேன். அதற்கும், விஸிட்டிங் பீஸ், மருந்து சார்ஜ், எல்லாம்...உம்... எடும்.

முரளி : (கையைப் பிசைந்துகொண்டு) ஸார்...

டாக் : (கடுகடுப்புடன்) என்ன, ஸார் ? நேரமாயிற்று. நேர மாக ஆக, டாக்ஸி வாடகை அதிகமாகும். ஜல்தி, மை காட், என்ன டிலே ?

முரளி : சார்...

டாக் : (மனதிற்குள்) இதென்னடா எழவு, ஸார், ஸார் என்று உயிரை வாங்குகிறான் இவன் ! (வெளிப்படையாக) பணம் கொண்டு வந்தேளா ?

முரளி : ஸார், மருந்து கொடுங்கள். நாளைக் காலையில் உங்க ளுக்கு 'ஜாடா' வாக எல்லாப் பணமும் கொடுத்து விடுகிறேன். குழந்தையின்...

டாக் : (கோபத்துடன்) நான்சென்ஸ் ! டாக்ஸி சார்ஜ் இப்போ யார் கொடுப்பார்கள் ?

முரளி : மொத்தமாக பில் அனுப்புங்களேன்.

டாக் : பில் ! விஸிட்டிங் சார்ஜ் எல்லாம் கைமேலே வரணும் பிரதர்.

முரளி : ஐயோ, இப்பொழுது கைவசமில்லையே. ஒரு இடத்தில் பணம் வரவேண்டும். நாளை...

டாக் : என்ன 'மேன்', வேஷம் போட்றே ?

முரளி : என் குழந்தை குணமாக வேண்டுமென எனக்கிராதா கவலை ?

டாக் : விஸிட்டிங் சார்ஜ் கிளம்பாவிட்டால்...

முரளி : (மடியை அவிழ்த்து அதிலிருந்து ஒரு ரூபாயை எடுத்து டாக்டரிடம் கொடுக்கிருன்)

டாக் : சீ ! இரண்டு ரூபாய் ஐயா சார்ஜ்.

முரளி : இப்பொழுது இல்லையே ! நாளை...

டாக் : என்ன நாளை, நாளை என்று ? உம் பணம் எனக்கு வேண்டாம் ஐயா. இப்படிப்பட்டவங்க தர்ம ஆஸ்பத்திரிக்கு...

முரளி : சார், அப்படிச் சொல்லப்படாது. ஏதோ இப்பொழுது கஷ்ட திசையிலிருக்கிரோம். நாளை அவசியம்...

டாக் : போ ஐயா. உன்னுடன் யார் வாதாடுவார்கள் ? நாளை பணம் வந்த பிறகு வா. மருந்து தருகிறேன்.

(கோபமாக தன் பாக்கெட்டில் ஒரு ரூபாயைப் போட்டுக்கொண்டு வெளியே செல்கிருர்)

முரளி : (ஏங்கிப்போய் நின்று விடுகிருன். அவன் கண்களில் நீர் ததும்புகிறது) ஐயோ ஈஸ்வரா ! இதுவும் உன் சோதனையா ? என் மனதிற்குப் பிடித்தப் பெண்ணை மணந்துகொண்டேனென்பதற்காக இத்தண்டனையா ? ஐயோ, சரஸா ! எவ்வளவு சுகத்திலிருந்தவள் ! இவ்வளவு நாளும் ஒருமாதிரியாக இருந்து வந்ததே ! 'பட்ட காலிலே படும்' என்பதுபோல, வறுமை, பிணி எல்லாம் ஒன்று சேர்ந்தா வரவேண்டும் ?

சரசா : (கலவரத்துடன்) நாதா, ஏன் இப்படிக் கண்ணீர் வடிக்கிறீர்கள்? எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அப்படிச் செய்தாலென்ன?

முரளி : என்ன அது?

சரசா : இல்லை. எங்கப்பாவுக்கு இருக்கிற நிலைமையைப் பற்றி ஒரு கடிதம் எழுதறது. அவர் உடனே பணம் அனுப்புவார். இல்லாவிட்டால் புறப்பட்டாவது வந்து......

முரளி : (கோபத்துடன்) சரசா! உனக்குப் புத்தி பேதித்து விட்டதா என்ன? பிச்சை எடுத்துப் பிழைத்தாலும் பிழைக்கலாமே ஒழிய, 'ஐயா! என்னிடம் காசில்லை. என் பிள்ளை குட்டிகளைக் காப்பாற்ற உதவி செய்யும்' என்று பெண் கொடுத்தவனிடம் யாசகம் கேட்பதை விட உயிரை விடலாமே!

சரசா : ஐயோ! இப்படி ஏன் வித்தியாசமாக நினைக்கிறீர்கள் எங்கள் அப்பாவை?

முரளி : அதென்னமோ, நீ சொல்லும் முறை தப்பாகப் படுகிறது எனக்கு.

சரசா : நாதா! ஏன் வீணாக மனதை அலட்டிக் கொள்ளுகிறீர்கள்? இன்று தாழ்ந்த சக்கரம் நாளை மேலே வந்து தானே ஆகவேண்டும்? ஏதோ நம் கஷ்டகால வேளை. இன்று இல்லாவிட்டால் நாளை கடவுள் கண் திறக்காமலா போய்விடுவார்?

முரளி : நாளைவரை அவதிப்படுவதார் சரசா? நான் ஒரு கட்டை மட்டும் என்றால் லக்ஷ்யமே செய்யமாட்டேன். அருமைச் சந்துருவும் நீயும், வாடி வதங்குவதைக் காணும்போது, என் மனம் சகிக்கவில்லையே?

(முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு அழுது, பெருமூச்சு விடுகிறான்)

சரசா : (சற்று யோசித்து) நாதா, ஒரு யோசனை.

முரளி : சரசா, உன் தகப்பனுரிடம் கை நீட்டும் ஈன வியாபாரத்தைப் பற்றி மறுபடியும் ஆரம்பிக்கப் போகிருயா ?

சரசா : அதில்லை நாதா. என் மூக்குத் திருகாணி ஒன்று பாக்கியிருக்கிறது. நல்ல வைரம் பதிக்கப் பெற்றது. அதைக் கொண்டுபோய் பணமாக்கி, குழந்தைக்கு மருந்தும், கொஞ்சம் பிஸ்கோத்து முதலியனவும் வாங்கி வாருங்கள்.

முரளி : சரசா ! இருப்பது ஒரு திருகாணி. அதையும் எடுத்துக் கொடுத்துவிட்டு மூளியாகவா இருக்கப் போகிருய் ?

சரசா : குழந்தை பெரும் அவஸ்தையிலிருக்கிருன். எனக்கு அழகில்லை என்றுதானு வருத்தப்பட வேண்டும் ? (திருகாணியைக் கழட்டிக் கொடுக்கிருள்)

முரளி : (வருத்தத்தோடு திருகாணியை வாங்கிக்கொண்டு) சரசா! உன்னைப் போன்ற புத்திசாலிப் பெண்ணை மனைவியாகப் பெற்ற என் பாக்கியமே பாக்யம். இதோ நான் கடை வீதிக்குப்போய் சீக்கிரமே வருகிறேன். குழந்தையைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்.

(வெளியே போகிருன். சரசா கதவைத் தாளிட்டு வருகிருள். வாசலில் யாரோ கதவைத் தட்டுகிருர்கள். சரசா 'யார் அங்கே' என்று கேட்டுக்கொண்டே வாசலுக்குச் செல்கிருள். அங்கு ஒரு பாட்டியம்மா வந்து நிற்கிருள். அவளை சரசா உள்ளே அழைத்து வருகிருள்)

சரசா : பாட்டி! வாங்கோ.

பாட்டி : (சரசாவை மேலும் கீழும் பார்த்துவிட்டு) அட கிரக சாரமே ! நீ யாரடி மூளி மாதிரி ?

சரசா : நான் சிக்காபூர் ஜமீன்தாரின் பெரிய பேரனை முரளீதரர் இருக்கிருரே, அவருடைய மனைவி சரசா.

பாட்டி : அட எழவே! முரளியின் ஆத்துக்காரி நீதானு? என்ன அநியாயமடி? ஆத்துக்காரர் பேரை வாய் கூசாமே இவ சொல்றதைப் பாரேன்!

சரசா : அப்படிச் சொல்வதால் என்ன பாட்டி குற்றம்?

பாட்டி : என்ன குத்தமா? ஆம்படையானுக்கு அடங்கி ஒடுங்கி கிடக்கறவன்னு, அதெல்லாம் சொல்லமாட்டா. எங்க காலத்திலெல்லாம் இப்படிச் சொன்னு, நாக்கை ஒட்ட அறுத்துடமாட்டோமா!

சரசா : பாட்டி! நின்று கொண்டே பேசுகிறீர்களே. உட்காருங்கோ அப்படி. நீங்க யாருன்னு தெரியலையே.

பாட்டி : (உட்கார்ந்து கொண்டு) அட ராமா! என்ன தளுக்கு மினுக்கு பண்ருடி இவ. அதுதான் எங்க முரளி இவ வலையிலே விழுந்து மண்ணுப் போயிட்டான். அவன் எங்கேடி போனுன்?

சரசா : குழந்தைக்கு உடம்பு சௌக்யமில்லை. அதற்காக மருந்து வாங்கி வரப்போயிருக்கிருர். பாட்டி தாங்கள் யார்?

பாட்டி : என்னடி, பாட்டி பாட்டின்னு சும்மா? அப்படி என்னடி எனக்கு வயசாயிடுத்து? 70, 80 ஆயிடுத்தா? ஏதோ 65 ஆச்சுன்னு சொல்லிக்கிரு! என் தங்கை பிள்ளை முரளி, ஊரைவிட்டுப் போனவன் எங்கேயோ ஜாதிவிட்டு ஜாதியிலே ஒரு பொண்ணைக் கட்டித் தொலைச்சுண்டு, திரும்பி வரவேயில்லேன்னு! காஞ்சிபுரத்துக்கு காமாக்ஷி கருட சேவைக்கு வந்தப்போ, முரளியை எங்கேயோ பார்த்தேன்னு! அவா சொன்னப்புறம், என்ன இருந்தாலும், உடப்பிறப்பு வயத்திலே பொறந்ததுதானே? மனசு கேக்கறதா?... (மூக்கைச் சிந்திய வண்ணம், கண்ணைத் துடைத்துக்கொண்டு, அழுவதுபோல் பாவனை செய்து) உடனே புறப்பட்டு ஓடி வந்தேன். அவனைப்

பாக்காமே கண் பூத்துப் போச்சேடி! அவன் எப்போ வருவாண்டி?

சரசா: வந்துவிடுவார். சற்றுப் பொறுங்கள். ஸ்நானம் செய்துவிட்டு ஆகாரம் ஏதாவது செய்து கொள்ளுங்கள். குழந்தையைக் கொஞ்சம் கவனித்து விட்டு வருகிறேன்.

பாட்டி: அதென்னடி குழந்தை? அது வேறே பிறந்திருக்கா? அதுக்கென்ன வந்தது உடம்புக்கு?

சரசா: குழந்தைக்கு அசாத்திய ஜுரம். என்னருமைச் சந்துரு ஆகாரம் சாப்பிட்டு ஆறேழு நாளாய்விட்டது. கண்ணையே திறக்கவில்லை.

பாட்டி: அது சரிதான். முரளி இப்போ எங்கேடி வேலையா இருக்கிறுன்?

சரசா: வேலையா? இப்போதைக்கு வேலை ஒன்றுமில்லை. வேலைக்காகத் தான் பிரயத்தனம் செய்து கொண்டிருக்கிறுர்.

பாட்டி: அதென்னடி பிரயத்தனம்? இத்தனை நாளாகச் சாப்பாட்டுக்கு என்ன செய்தான்?

சரசா: (மௌனமாயிருக்கிறுள்)

பாட்டி: வாயிலே என்ன கொழுக்கட்டையா போட்டுண்டிருக்கே? காது செவிடா?

சரசா: இல்லை...எங்கப்பா கொடுத்த பணமும், அவர் கையிலே கொஞ்சம் பணமும் வைத்திருந்தார். அதோடே லைப் இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்டு வேலையும் பார்த்து வந்தார். அதிலும் வரும்படி அவ்வளவு ஸ்வாரஸ்யமாக இல்லை. ஆகவே....

பாட்டி: பேச்சைப் பாரடி! பிரமாதமா எப். எல். பி. எல். படிச்சவமாதிரி அழுத்தந் திருத்தமாய்ப் பேசறு! அப்புறம்..

சரசா : ஆகவே வேறே வேலைக்குப் பிரயத்னம் செய்துகொண்டிருக்கிறார். இன்னும் ஒன்றும் சரியாக அமையவில்லை.

பாட்டி ; அதனாலே ஒன் கை மூக்கெல்லாம் மூளியாச்சா ?

சரசா : மூளியாவதென்ன ? ஆபத்திற்கு உதவாத நகைகள் இருந்தென்ன பிரயோஜனம் ? நீங்க வாங்கோ. அவர் வர்ரத்துக்குள்ளே ஸ்நானம் பண்ணுங்கோ.

பாட்டி : கையிலே பணமில்லை. வயித்துக்கு லாட்ரி. இதிலே குழந்தை குழந்தையென்று மாரடிப்பு வேறே. எங்கிருந்து வந்து வாச்சேடி மூதேவி மாதிரி, என் கண்மணி முரளிக்கு ?

(திரைவிழுகிறது)

## *காட்சி 11.*

### இடம் தெரு

**பாத்திரங்கள் : முரளி, மார்வாடி.**

மார் : நமஷ்காரம் ஸாமி.

முரளி : (ஈனக் குரலில்) வாருங்கள், நமஸ்காரம்.

மார் : என்னுஸ் ஸாமி, கடன் கேக்க வந்தோம் நாம்ப !

முரளி : அப்படியா, நல்லது.

மார் : என்னு நல்லது. எப்போஸ் ஸாமி தரப்போறே ?

முரளி : தருகிறேன்.

மார் : தருகிறேன், தருகிறேன்னு எத்தனை வாட்டிச்சொல்றே ஸாமி ? எப்போ தரப்போறே ?

முரளி : இப்போது கையிலே பணமில்லை. பணம்....

மார் : அரேரே ! நல்ல ஸாமி நீ...! கடன் வாங்கின பணத்தை ஏப்பம்விடப் பார்க்கிறே ?.. உம் !

முரளி : உனக்குப் பணமில்லையென்று யாராவது சொல்வார்களா அப்பா? என் கையிலே இப்போ பணம் இல்லை என்றேன். பணம் வந்ததும்...

மார் : உனக்கு எப்போ ஸாமி பணம் வர்ரான்? இதுவரேலே எத்தனை வர்ட்டி உன் வீட்டுக்கு நம்பள் அலையறது?

முரளி : ஸேட், கொஞ்சம் பொறுத்துக் கொள்ளும். நண்பர் ஒருவர் பணம் கொடுக்கவேண்டும். அவர் கொடுத்த உடன், உன் கடனை முதலில் தீர்த்துவிட்டு மறு ஜோலி பார்க்கிறேன்.

மார் : உன் நண்பேர் கொடுக்காட்டா?

முரளி : அவர் கொடுக்காமலிருக்கமாட்டாரே!

மார் : என்ன ஸ்ஸாமி இது 'தண்டா' பண்றே நீ?

முரளி : தண்டா கிண்டா ஒன்றுமில்லை.

மார் : அப்படியானு என்னுஸ் ஸாமி, வாங்கின கடனை வச்சிட்டு வேறே வேலை பார்.

முரளி : சேட், கோபித்துக் கொள்ளக்கூடாது. வீட்டிலே குழந்தைக்குப் பிரமாதமான ஜுரம். அதற்காக இருந்த பணமெல்லாம் செலவழிந்து போய்விட்டது. இப்போதுதான் டாக்டர் வந்துபோனுர்.

மார் : அந்தக் கதை நம்பள்கு வேணும். பணம் கொட்க்கிறியா இல்லையா, சொல்லு.

முரளி : அவசியம் கொடுக்கிறேன். ஆனல் சற்றுப் பொறுத்துப் தானகவேண்டும். இதற்கு முன் கடன் வாங்கிய போதெல்லாம் கொடுக்கவில்லையா? இப்பொழுது குடும்பத்தில் ஏக காலத்தில் பல கஷ்டங்கள் வந்து சேர்ந்தன. அதனல் இத்தடவை தாமதப்பட்டுவிட்டது.

மாரி : என்ன மனுஸன் ஐயா நீ! பணம் கேட்டா ஊட்டுக் கதை சொல்ருன். உன்கி புத்தி கித்தி இல்லே. கடன் வாங்கறபோது ஷோக்கா இருந்திச்சா? மரியாதை யாய் குடுத்திடு. இல்லாட்டி மானம் போயிடும். நாம் யார்னு தெரியலே. பகதூர் பகன்மேல் சேட்! உம்.. அடுத்த வாரம் வர்ரப்போ பணத்தைக் கட்கிட்ணும். இல்லாட்டா வசூலிக்கிற விதமாக வசூலிச்சுக் கொள் றேன், நீ வேசம் போட்றதை நிறுத்திடு ஐயா!

(ஸீன் மாறுகிறது)

## *காட்சி 12.*

### இடம் : ஏழை வீடு.

**பாத்திரங்கள் :** சரஸா, முரளி, மீனுப் பாட்டி.

(கதவு தட்டப்படும் சத்தம் கேட்கிறது)

சரசா : இதோ வந்துவிட்டேன். (ஆவலுடன் வாசலுக்குப் போய், கதவைத் திறந்து, முரளியை அழைத்து வரு கிருள். முரளி வாடிய முகத்துடன் இருக்கிருன்) நாதா! திருகை விற்றீர்களா? பணம் கிடைத்ததா? மருந்து வாங்கினீர்களா?

முரளி : (பெருமூச்சுடன் நாத்தடுமாற) சரசா! நம் நிழல் நம் முடனே விடாமல் வருகிறதே. திருகை விற்றேன். ஒரு வியாபாரி அதற்கு பத்து ரூபாய் கொடுக்கிறேன் என்ருன். வைரத்திற்கு அந்த விலேதானு என்று நினைத் தேன். இருந்தாலும் நமக்கிருக்கும் அவசரத்திற்கு வந் தது போதுமென்று எண்ணி, பத்து ரூபாய் பணத் தைச் சந்தோஷமாக வாங்கிக் கொண்டேன்.

சரசா : (சந்தோஷத்துடன்) அப்படியானுல், மருந்து வாங் கினீர்களா?

முரளி : பொறு. அவசரப்படாதே. நான்தான் சொன்னேனே, நம் நிழல் நம்மை விடவில்லை என்று! பணத்தை வாங்கிக்கொண்டு அவசரமாக டாக்டர் வீட்டிற்குப் புறப்பட்டேன்.

சரசா : உம்......

முரளி : நாலடி நடந்திருப்பேன். என் தோள்மீது யாரோ கையை வைத்தார்கள். சட்டெனத் திரும்பிப் பார்த்தால், அந்தக் கடன்கார மார்வாடி, எமன் மாதிரி நின்றுகொண்டிருந்தான். கடைத்தெரு. தெரிந்தவர்கள் நாலுபேர் கூடுகிற இடம். பேசாமே ஒரு ஐந்து ரூபாயை அவன் கையிலே போட்டேன்.

சரசா : ஐயோ !

முரளி : அந்தப் பாவி நான் திருகுக்குப் பத்து ரூபாய் வாங்கினதைப் பார்த்திருக்கிறான். அஞ்சு ரூபாயையும் வாங்கிக் கொண்டு மேலும் கலாட்டா செய்தான். இன்னும் ஒரு ரூபாய் கொடுத்து அவன் தாடையைப் பிடித்து கெஞ்சாத வண்ணம் கெஞ்சிவிட்டு, டாக்டர் வீட்டிற்கு ஓடினேன். டாக்டர் இரண்டு ரூபாய், பீஸுக்கு என்று வாங்கிக் கொண்டார். ஒரு ரூபாய் இன்றைய மருந்துக்கென்று எடுத்துக்கொண்டு மருந்து கொடுத்தார். நாளைக்கு மருந்திற்குப் பணம் கொடுத்தால்தான் கொடுப்பாராம். பாக்கி ஒரு ரூபாய்க்குக் கொஞ்சம் அரிசி, பருப்பு உப்பு, அரையணா பிஸ்கோத்து எல்லாம் வாங்கி வந்தேன்.

பாட்டி : (உள்ளேயிருந்து) ஏண்டி தடிப் பொணமே! யார் கிட்டேடி பேசிண்டிருக்கே ?

முரளி : (திடுக்கிட்டு) பெரியம்மா குரல்மாதிரி இருக்கே ! இவ எங்கடாப்பா வந்தா இப்போ 'ஹைட்ரஜன் பாம்' மாதிரி. (பெரியம்மா பிரவேசிக்கிறாள்) என்ன இது சரஸா! பெரியம்மா வந்ததைப் பற்றி சொல்லவே இல்லையே ?

பாட்டி : அட முரளி ! நீ சுத்த வெகுளிடா. அவ ஏண்டா சொல்லப் போறு ? அவளுக்கென்னடா அக்கறை ?

முரளி : (அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு) இல்லை பெரியம்மா. குழந்தைக்கு உடம்பு சௌக்கியமில்லை பாருங்கோ, அதனுலே......

பாட்டி : அதனுலே என்னடா ? வீட்டுக்கு வந்தவாளை மறந்துடச் சொல்றதோ ?

முரளி : (சிரித்துக்கொண்டே) இல்லை பெரியம்மா. அதனுலே மருந்து வாங்கிண்டு வந்தேளான்னு கேட்டுக்கொண்டிருந்தாள். அதுக்குள்ளே நீங்களே வந்துட்டேள்.

பாட்டி : உன்னைச் சொல்லிக் குத்தமில்லே. அவ உன்னை அப்படி மயக்கிட்டா. அது எப்படியானுலும் போறது. என் கண்ணே ! (அருகில் வந்து முரளியைத் தடவிக் கொடுத்து) நீ சௌக்கியமாயிருக்கிருயோடா ? உடம்பெல்லாம் வாடிப் போச்சேடா என் கண்ணே !

முரளி : பெரியம்மா, எனக்கு உடம்பு ஒன்றுமில்லை. நீங்கள் போய் ஸ்நானம் கீனம் எல்லாம் செய்யுங்கள் ! (பாட்டி போகிருள்) சரசா ! என்ன சோதனை பார்த்தாயா ? இந்தக் கஷ்ட சமயத்திலா பெரியம்மா வந்து சேர வேண்டும்! இப்பொழுது நாலு ஜீவன்களுக்கான உணவைத் தினந்தோறும் தேடியாக வேண்டும். கடவுள் இருக்கிருர் !

சரசா : அவர்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு இருப்பதைத் தவிர நமக்கு வேறு கதியில்லை. உங்க பெரியம்மா......

பாட்டி : (மெள்ள வெளியே வந்து) என்னடி மந்திரோபதேசம் செய்யறே ? பெரியம்மாவுக்கு என்னடி வந்துடுத்து ?

முரளி : பெரியம்மா, நீங்கள் சமயலைக் கவனியுங்களேன். இங்கே வந்து ஏன் தொந்தரவு செய்கிறீர்கள் ?

பாட்டி : அடே ! நீ இப்போ பழைய முரளி இல்லேடா ! நான் ஏண்டா கிழட்டுப் பொணம், சிவனேன்னு ஊரிலே

இருக்காமே ஊர் விட்டு ஊர் வந்து உங்களிடம் வார்த்தை கேட்கணும்? என் தலைஎழுத்து. (தலையில் அடித்துக் கொள்கிருள்). நான் தொலேஞ்சு போயிட்றேன். நான் வந்தது எஜமானி அம்மாளுக்குப் பிடிக்க வில்லே போலிருக்கு. அதை அவ உன் காதிலே மந்திரமா ஜபிச்சுட்டாப் போலிருக்கு! அதுதான் நீ இப்படி வார்த்தை ஆடறே. நான் போறேன் இப்பவே. (போகிருள்)

முரளி : சரசா! கொஞ்ச நேரம் கழித்து குழந்தைக்கு ஒரு டோஸ் மருந்து கொடு. எனக்கு மனம் நிம்மதியாகவே இல்லே. சற்று வெளியே போய் வருகிறேன்.

(சரசா குழந்தையை எடுத்து மடிமேல் வைத்துக் கொண்டு கொஞ்சிக் கொண்டு மருந்தைக் கொடுக்கிருள். பாட்டி வருகிருள்)

பாட்டி : என்னடி இது, மணியோ பதிஞெண்ணுச்சு. வீட்டிலே ஒரு மணி அரிசியைக் காணேம். அடுப்பிலே பூனே தூங்குகிறது. ஒரு விறகாவது வரட்டியாவது காணேம். அடுப்பை நானும் அப்போதிலிருந்து கவனிக்கிறேன். குழந்தை, குழந்தைன்னு அந்த மூதேவி கிட்டவே...

சரசா : பாட்டி, நீங்க பெரியவா. அந்த மாதிரி சொல்லக் கூடாது.

பாட்டி : என்னடி, நானும் அப்போதிலிருந்தே கத்தறேன். இன்னும் எதிரே எதிரே வாயாட்றே! எழுந்திரடி தடிப் பொணமே! இன்னும் உட்கார்ந்திருக்கிற திமிரைப் பாரு. இந்த அழகான குழந்தை இருந்தா என்ன, போனு என்ன? இருந்தா நன்னு இருக்கணும். இப்படி இருக்கிறவாளேயும் சந்திலே இழுத்துண்டு இது இருக்கிறதைவிட, போறதே மேல்.

சரசா : பாட்டி! நீங்க என்னதான் எங்களுக்குப் பாத்தியமா யிருந்தாலும் இவ்வளவு வயசானதிற்கு அடையாளம்

உங்கள் பேச்சிலே தெரியலே. இந்த மாதிரி பேசற எந்தப் பெரியவாளேயும் நான் பார்த்ததே கிடையாது. உலகத்திலே ஒவ்வொருவர், ஒரு குழந்தைக்காக எவ்வளவோ தவம் செய்கிருர்கள். அப்படி இருக்க, நீங்கள் இவ்வளவு பெரியவா, எங்கள் பெரியம்மா, வாய் கூசாமல் குழந்தையைப் பற்றி இவ்விதம் பேசலாமா? இது உங்களுக்கு அழகா? அதுவும் குழந்தைக்கு உடம்பு இவ்வளவு ஜாஸ்தியாக இருக்கும் சமயம், எங்களுச்கும் ஆதரவில்லாமல் தவித்துக் கொண்டிருக்கும் சமயம், இதுதானு உங்கள் பேச்சின் முறைமை? இது சுத்தமாக நன்ருகவே இல்லே.

பாட்டி: என்ன, அடக் கண்ருவியே! நன்னு வந்து சேர்ந்தேன்! சிவனேன்னு ஊரிலே இருக்காமே, ஊர்விட்டு ஊர் வந்து இந்தப் பேயண்டே வந்து இருக்க, இப்படியும் என் விதியா! என் தலேயெழுத்தா! (ஓவென்று அலறி) ஐயோ, அட ராமா, அட ராமா. நான் சாக மாட்டேனு! நான் சாகமாட்டேனு! நன்னு இல்லேயாம், நன்னு இல்லே.

(செம்பினுல் தலேயில் இடித்துக் கொள்கிருள். முரளி வருகிருன்)

முரளி: பெரியம்மா! பெரியம்மா! என்னசமாசாரம்? இதென்ன உங்கள் நெற்றியில் ரத்தம்? சரஸா, இது என்ன?

பாட்டி; (அழுதுகொண்டே) அப்பா! நான் ஏண்டா வந்தேன். எல்லாம் உன் அழகான ஆமடையாள் இருக்காளே, அவளாலே வந்ததுதான். ஐயோ நன்னு இல்லேயாண்டா! நன்னு இல்லேயாமே!

முரளி; சரசா! என்ன இது?

சரசா: (மௌனம்.)

முரளி: சரசா! என்ன பேசாமலிருக்கிருய்? என்ன சமாசாரம், சொல் சீக்கிரம். எது நன்ருக இல்லே?

சரசா : (மௌனம்)

பாட்டி : அவ ஏண்டா, வாயைத் திறக்கப்போரு! நிர்மூளி, தரித்திரம். அவள் இருக்கிற இடத்திலே ரத்தக் காயம் இல்லாமல் என்ன இருக்கும்? நன்ரு இல்லையாம், நன்ரு இல்லையாம்.

முரளி : ஆஹா... என்ன சரஸா! சரஸா!

சரசா : (மௌனம்)

முரளி : ஆஹா... நன்ரு இல்லையாம். நன்ரு இல்லையாம். பெரியம்மா நன்ரு இல்லையா? பெரியம்மா பேசுவது நன்ரு இல்லையா? பெரியம்மா இருக்கிறது நன்ரு இல்லையா? இவ்வளவு கொழுப்பா உனக்கு? பெரியவர்கள் ஒருவருமில்லை என்று தவித்திருந்த வேளையில், இவ்வளவாவது நமக்குச் சகாயம் செய்ய வந்தாரே இவர்கள் என்றில்லாது, பெரியம்மாவை இப்படியும் நீ அடித்து ஏசலர்மா? புத்தியில்லாத கழுதை!

(அடிக்கிருன். சரஸா அழுகிருள். உள்ளே போகிருள்.) ('என் தலைவிதி!' என்று முரளி ஒரு பக்கமாகப் போகிருன்.)

பாட்டி : ஏண்டா வருத்தப்படறே? நீ இருந்த நிலைமை என்ன? இப்பொழுது இருக்கிற கண்ருவி என்ன? வேலையும் இல்லையாம் உனக்கு. உனக்கு எதுக்கடா இவ்வளவு கஷ்டம்? பேசாமே தாத்தாவுக்குப் பணம் வேணும்னு எழுதறதுதானே?

முரளி : எல்லாம் எழுதியாச்சு. செப்புக் காசுக்கூட தரமாட்டாராம். பரவாயில்லை. மரம் வைத்தவன் ஜலம் விடுகிருன்.

பாட்டி : என்ன இருந்தாலும் பெரியவா சொல்றதைக் கேளு. நான் ஒரு வார்த்தை சொல்றேன்.

முரளி : சொல்லுங்கள்.

பாட்டி : நேரே உங்க தாத்தாவிடம் போ...

முரளி: அவர்தான் என்னை அங்கு வரவே கூடாது என்று எழுதி விட்டாரே!

பாட்டி: கோபத்திலே அப்படி எழுதியிருப்பார். எப்போதுமா கோபம் இருக்கும்? அங்கே போ. தாத்தா காலிலே விழறது தப்பில்லே. அவர் கோபம் மாறி, உன் மேலே பழைய பிரியம் வரும். உன் கஷ்டம் வெடியும்.

முரளி: எனக்கென்னமோ அந்த வழி அவ்வளவு சரியெனப் படவில்லை. தவிர, இப்போ ஊர்ப் பயணத்துக்குப் பணத்துக்கு...?

பாட்டி: நான் வச்சிருக்கேன் அஞ்சு ரூபாய். இதை எடுத்துக் கொண்டு போ. சொன்னபடி செய். வார்த்தையைத் தட்டாதே.

முரளி: சரி. (பணத்தை வாங்கிக் கொள்கிறான்) பெரியம்மா! குழந்தையையும் சரஸாவையும் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். உங்கள் வார்த்தையைத் தட்டக் கூடாதே என்று போகிறேன். எனக்கென்னமோ மனசே இல்லை சரசா, சரசா...!

(சரசா வருகிறாள்)

இந்தா! நாளைக்கு சந்துருவுக்கு மருந்துக்காக ஒரு ரூபாயை வைத்துக் கொள். நான் போய் தாத்தா வைப் பார்த்துவிட்டு, சீக்கிரம் திரும்பி வந்துவிடு கிறேன்.

(போகிறான்)

(திரை விழுகிறது)

## *காட்சி 13.*

**இடம்: தெரு**

**பாத்திரங்கள்:** கனபாடிகள், நாட்டி.

(கனபாடிகள், 'சீத்தாராமா' என்று சொல்லிக் கொண்டு வருகிறார். எதிரே நாட்டி, 'இங்கிலீஷ் நோட்' ஒன்று பாடிக்கொண்டே வருகிறாள்.)

கனபாடி : சீத்தாராம்! சீத்தாராம்! இது என்ன சங்கிதண்டாப்பா, ராமா, அட பிசாசே !

நாட்டி : ஏய், கனபாடி ! உன்னைத்தாங்கறேன் ! கனபாடிகளே ! உன் சீத்தாராம் போதுமம்மா !

கனபாடி : அதிகப் பிரசங்கி ! மரியாதையாகப் பேசுடா. கண்கிண் தெரியலே? நாம் ஆம்பிள்ளையாகத் தோணலே உனக்கு ? சீத்தாராம் !

நாட்டி : அட பூஜாரி மகனே ! உன் சீத்தாராமிலே மண்ணை வாரிப் போட.

கனபாடி : சீச்சீ, காலாடி ! பெரியவாளிடம் மரியாதையாகப் பேசுடா !

நாட்டி : மரியாதை கொடுத்து, மரியாதை வாங்கம்மா, கன்பாடி ! அது போகட்டும். முகுந்தன், வீட்டிலே இருக்கானு ?

கனபாடி : முகுந்தும் காணும், குல்கந்தும் காணும். அடே ! ஏண்டா இப்படி முகுந்தனை குட்டிச்சுவராக்கறே ? மரியாதையாக அவனை விட்டுட்டுப் போயிடு. இல்லாட்டா ஜமீன்தாரிடம், நம்ம முகுந்தன் பணத்தைத் திருடித் தின்று பிழைக்கும் இந்த நாட்டி, முகுந்தனைக் கொல்லவும் பார்க்கிருன்னு சொல்லிவிடுவேன்.

நாட்டி : என்னம்மா, உன் கைவரிசையை என்னிடமா காட்டப் பாக்கறே? உன் கந்த புராணத்தை வெளியே அவிழ்த்து விட்டேன்னு, சந்தி நாரிப் போயிடப் போறது.

கனபாடி : என்னடா, சின்னப் பயலே ! என்னைப் பற்றி ரொம்பத் தெரிந்துகொண்டு விட்டாயோடா, அதிகப் பிரசங்கி ?

நாட்டி : பாரு, மறுபடியும் உஷார் ! அந்த விசாலாக்ஷி, காமாக்ஷி இடத்திலே கடன் வாங்கி நாமம் போட்டையே, அதுவும், ஜமீன்தார் வீட்டிலே ராதாவை ஆலிங்கனம்,

அதுவும் எடுத்து விட்றேன். உன்னுலானதைப் பாரப்பா, கன்பாடி சிங்கமே!

(போகிருன்)

கனபாடி : (ஓடியே போய் அவன் கையைப் பற்றி இழுத்து நிறுத்தி,) ராமா! அடே நாட்டி! நாட்டி அப்பனே! இப்படிக் கோபித்துக்கொண்டு போகலாமாப்பா?

நாட்டி : (கேலிச் சிரிப்புடன்) ஹல்லோ கன்பாட்டிகளே!

கனபாடி : அப்பா! நீ சின்னவனுனுலும் உனக்குக் கோடி நமஸ்காரம் வேணும்னுலும் செய்யறேன், கோவிந்தா. இனி மேல் நான் உன் வழிக்கே வருகிறதில்லையடா, பெருமாளே!

நாட்டி : பலே. அப்படி வா வழிக்கு. நான் யார்னு இப்பத் தெரியறதா?

கனபாடி : தெரியறதுடாப்பா. தெரியறது. பெரிய தீக்ஷிதர் பிள்ளையான நடராஜ தீக்ஷிதர்னு தெரியறது.

நாட்டி : உம். (கனபாடிகளின் கழுத்தைச் சேர்த்துக் கட்டிக் கொண்டு) இனிமேலே நீங்க, நம்ப பிரெண்ட். இன்னிக்கு முதல் ஒரு ஒப்பந்தம் செய்துக்கலாம். உன் வழிக்கு நான் வர்ரதில்லே, என் வழிக்கு நீ வரக்கூடாது.

கனபாடி : இல்லேடாப்பா, இல்லே.

நாட்டி : நீரும், நானும் டிரெஸ் பண்ணிக்கிறதிலே வேறே. மற்றப்படி அந்தரங்க அபிப்பிராயத்திலே ஒன்றுதான். எனக்கும், உமக்கும் வேண்டியதும் ஒன்றே. அது தான், (பணம் என்பதைக் கையை சுண்டிக் காட்டி) கனபாடியம்மா! போயிட்டு வரட்டா? முகுந்தன் வந்தா, என் ரூமிற்கு வரச் சொல்றேளா?

கனபாடி : சரியப்பா. (நாட்டி புறப்பட) இரப்பா கொஞ்சம். உன் விலாசமென்னடாப்பா?

நாட்டி : எதுக்கம்மா?

கனபாடி : அடிக்கடி அங்கே வந்து உன்னைத் தரிசனம் செய்யடா, அப்பனே !

நாட்டி : அந்தக் கஷ்டம் உனக்கு வேண்டாமடா சுப்பனே! வேணுமானு நானே வருகிறேன். போய்வரட்டுமா ? குட் பை. கன்பாட்டி. (போகிறுன்)
(கழுத்தைத் தடவிவிட்டுக்கொண்டு) கிங்காங் மாதிரின்னு கழுத்தை நெறித்துவிட்டான்! அப்பா! கழுத்தே போயிடுத்தே !

கனபாடி : அடே பயலே. இனிமேலே உனக்கும் பெரிய வெடி வைக்கறேண்டா ! இனி நீ தொலையாட்டா, என் பாடு நித்ய கண்டம் பூர்ணயுசுதான். சீத்தாராமா !

(போகிறுர்)

(திரை விழுகிறது)

## காட்சி : *14.*

### இடம் : *ஏழைக் குடிசை.*

பாத்திரங்கள் : சரஸா, குழந்தை சந்துரு.

(ஏழைக் குடிசையில் ஒரு புறம் ஒரு பாயில் ஒரு குழந்தை துணியால் மூடப்பெற்றுப் படுத்திருக்கிறது. அதன் அருகே அமர்ந்து, அதற்கு ஆறுதல் கூறிக் கொண்டிருக்கிறுள். சரசா மெல்ல எழுந்து)

சரசா : அப்பா ! இப்பொழுதுதான் குழந்தை கொஞ்சம் கண்களை மூடி இருக்கிறுன். எத்தனை கஷ்டங்களை எங்களுக்குக் கொடுத்து விட்டீர் பகவானே ! எங்களால் சகிக்க முடியவில்லை! ஒரு புறம் வறுமையின் கொடுமை! மற்ருெருபுறம், உற்ருரும் பெற்ருேரும் எங்களைக் கைவிட்ட கொடுமை. இந்தக் கொடுமைகளை எல்லாம் சகித்திருக்கக் கூடிய மனே திடத்தையும்,

மகிழ்ச்சியையும் அளித்துக் கொண்டிருந்த சந்துருவும் நோய்வாய்ப்பட்டு விட்டான். காயலாகக் கிடக்கும் என் கண்மணிக்கு ஆறுதலாய் அவனருகில் சற்று நேரம் வந்து உட்கார்ந்தால், பெரியமாமி திட்ட ஆரம்பிக்கிருள். நான் ஒருத்தி உயிரோடு இருப்பதால் தான் எத்தனை பேர்களுக்குக் கஷ்டம் இனியும் நான் உயிர் வாழ்ந்திருப்பது சரியல்ல. என்னைக் கல் யாணம் செய்து கொண்டதால்தானே என் பிராண நாதர் மீது அவரது தாத்தாவிற்கு ஆத்திரம் மூண்டது. அவரது சுகவாழ்விற்குப் பங்கம் நேரிட்டது. நான் மறைந்துவிட்டால், தாத்தாவின் கோபமும் தணியும்; எனது நாதரது கஷ்டங்களும் விடியும். என் கண் மணி சந்துருவும் சுகமாக வாழ்வான். சந்துரு...! (கண்ணீர் விடுகிருள்) என் கண்மணிதான் எவ்வளவு புத்திசாலி! எங்களது கஷ்டத்தை அறிந்தவன்போல், தன்னுடைய வேதனையைப் பல்லைக் கடித்துக் கொண்டு சகித்திருக்கிருன். கண்ணே சந்துரு! இந் தப் பாவியின் வயிற்றில் வந்து பிறந்தாயேடா நீ! ஐயோ! பெரியம்மா வந்துவிடப் போகிருர்களே! நான் நினைத்ததைச் சாதித்துக் கொள்ள, இதுவே தக்க தருணம். பெரியம்மாவும் உள்ளே வேலையாக இருக்கிருர்கள். என் நாதரும் இங்கு இல்லை. குழந்தையும் தூங்குகிருன். (சுற்றுமுற்றிலும் பார்க் கிருள். பக்கத்தே தொங்கும் தூளியைப் போய் அவிழ்க்கிருள். அதன் கயிற்றைச் சரிப்படுத்துகிருள்.) கண்ணே சந்துரு! நான் போய் வருகிறேனடா! நீ கொஞ்சிப் பேசும் மொழிகளைக் கேட்க, என்காதுகள் கொடுத்து வைக்கவில்லை. நீ 'அம்மா' என்று துள்ளி வரும்போது அள்ளி அணைக்க, என் கரங்கள் கொடுத்து வைக்கவில்லை. ரோஜாப்பூக்கொத்த உன் கன்னங்களை முத்தமிட, என் அதரங்கள் கொடுத்து வைக்கவில்லை. பாவி நான். இதோ போகிறேன். (முத்தமிட்டுவிட்டு, கயிற்றைக் கழுத்தில் மாட்டிக் கொள்கிருள்.

குழந்தை இருக்கும் பக்கம் பார்த்துவிட்டு, திடீரென்று அழுகை, தோன்ற 'கண்ணே, சந்துரு !' என்று குழந்தை அருகில் ஓடுகிறாள். மறுபடியும் குழந்தையை முத்தமிட்டுவிட்டு, தூளியண்டைபோய், கயிற்றை மறுபடியும் மாட்டிக்கொண்டு) அன்பரே ! உம்மிடம் அநுமதி பெருமலே இங்கிருந்து போகிறேன். என்னை மன்னித்துவிடும். ஆனால், எத்தனை ஜன்மங்கள் எடுத்தாலும், உம்மையே நான் நாதராகப் பெறப் பகவான் கிருபை புரியட்டும். இழந்த ஜமீன் பாகத்தை மீண்டும் பெற்று என் அருமைச் சந்துருவை அன்பாக வளர்த்து வாருங்கள். பகவானே ! எல்லோரையும் காப்பது தங்கள் பாரம் !

(நமஸ்கரித்து விட்டு, நாற்காலி மீது ஏறி நிற்கிறாள். கயிற்றைச் சுருக்கிட்டுக் கொண்டு, தொங்கப் போகிறாள். முரளி பிரவேசிக்கிறான். 'ஐயோ !' என்று அலறிக்கொண்டு போய், சரசாவின் கழுத்திலிருக்கும் கயிற்றை அவிழ்க்கிறான். அவள் பிரக்ஞை இழந்தவளாக, அவன் மீது சாய்கிறாள். அவளைத் தாங்கிப் பிடித்த வண்ணம், முரளி முன்னால் வருகிறான்.)

முரளி : (பதைபதைப்போடு) கண்ணே சரசா ! என்ன காரியம் செய்யத் துணிந்தாய் நீ ! ஒரு நொடிக்குள் என்னை நிர்க்கதியாக்கப் பார்த்தாயே. இன்று மட்டும் தடைபடாமல் எனக்கு ரயில் கிடைத்திருந்தால் என்ன ஆகியிருக்கும் ? சரசா ! இதோ என்னைப் பார். குழந்தையின் நினைவுகூட இல்லாது போய்விட்டதா உனக்கு ? ஐயோ, சரசா ! இத்தகைய காரியம் செய்ய வேண்டுமென்று ஏனடி உனக்குத் தோன்றியது ? இங்கு படும் கஷ்டங்களை அனுபவிப்பதைக் காட்டிலும், இறப்பதே மேல் என்று எண்ணினாயா ? ஐயோ! பெரிய டிபுடி கலெக்டரின் மகள் நீ ! எவ்வளவு சுகமாக வாழ வேண்டியவள் ! நீ இப்படி அவஸ்தைப் படுவதைக் காணும்பொழுதெல்லாம் அனலிடைப்

புழுவாக என் மனம் துடிக்குமே! உன் மனக் குறையை மாற்றவே, எங்காவது வேலை கிடைக்குமா என்று நான் தேடாத இடமில்லை, பாராத ஆளில்லை, ஏறி இறங்காத ஆபீஸில்லை. ஆனால் காலத்தின் கொடுமையை எண்ணினாலும், உடல் பதறுகிறதே! பட்டம் பெற்றும், பத்துக் காசிற்கு வழியில்லாது தவிக்கவேண்டி யிருக்கிறதே! வேலை என்று வெளியே புறப்பட்டால், ஜாதி, மதம் எல்லாம் பிசாசுகள் மாதிரி வந்து எதிரே நிற்கின்றன. சீ! என்ன சமூகம் இது! சரசா! இங்கிருப்பதைக் காட்டிலும் கரடி புலி சிங்கம் வாழும் காட்டிற்கே ஓடிவிடலாம். இந்த இரக்கமற்ற ஜனங்களின் ஒட்டுறவே வேண்டாம். சரசா...! நீ மட்டும் என் அருகில் இருந்தால் போதும்! சரசா!...சரசா...கண்களைத் திறந்து பார் என்னை. (சரசா மெதுவாக கண்களைத் திறக்கிறாள்) ஹா...ஹா சரசா...(ஆனந்தத்தோடு அவளைத் தடவிக் கொடுக்கிறான்) கடவுளின் கருணையே கருணை! (என்று கை கூப்பி, உடல் சிலிர்க்கத் தொழுகிறான்).

சரசா : [நாற் புறமும் பார்த்துவிட்டு) நாதா! நான் எங்கிருக்கிறேன்...? ஆமாம்!...இப்பொழுது நினைவிற்கு வருகிறது! நாதா! நான் செய்த அசட்டுக் காரியத்திற்கு......(அவன் பாதங்களில் வீழ்கிறாள்)

(முரளி அவளைத் தூக்கி)

முரளி : சரசா கண்ணே! எழுந்திரு. இவ்வளவாவது கடவுள் காப்பாற்றினாரே. இப்படி உட்கார்.

சரசா : ஐயோ வேண்டாம். நீங்கள் தாத்தாவைப் பார்க்க ஊருக்குப் போகவில்லையா?

முரளி : நான் இன்று ஊருக்குப் போயிருந்தால் என் குல விளக்கேயல்லவா அணைந்து போயிருக்கும்! என் வாழ்க்கையே அஸ்தமித்திருக்குமே! இனிமேல் நான் ஏன் ஊருக்குப் போகப்போகிறேன்.

சரசா : என்ன இது நாதா ! பெரியம்மா வந்துவிடப் போகிருர்கள். நீங்கள் போய் வாருங்கள். நான் மறுபடியம் இம்மாதிரியான தவறைச் செய்வதில்லே. இது சத்யம். குழந்தைக்காகவாவது போய்வாருங்கள்.

முரளி : சத்யமாகவா ?

சரசா : சத்தியமாக. (உள்ளிருந்து 'சரசா' என்று சப்தம் வருகிறது.) அதோ பெரியம்மா ! போங்கள். (அன்போடு வெளிப்பக்கம் இழுத்துப்போகிருள்.)

முரளி ; சரசா. மறுபடியும் ?

சரசா : இல்லே என்று (சிரிப்போடும் வெட்கத்தோடும் தலேயை ஆட்டுகிருள். முரளி வருத்தத்தோடு வெளியே போகிருன். உள்ளேயிருந்து) சரசா !

(சரசா திரும்புகிருள்)

(திரை விழுகிறது)

## *காட்சி 15.*

### இடம் : ஜமீன்தார் வீட்டில் ஓர் அறை

**பாத்திரங்கள் :** பத்மா, நாட்டி, முகுந்தன், கனபாடி, ஜமீன்தார், முரளி.

(பத்மா தனியாக இருக்கிருள். நாட்டி வருகிருன்.)

நாட்டி : ஹல்லோ, ஸிஸ்டர் பத்மா ! குட்மார்னிங் !

பத்மா ; வாருங்கள், நாட்டிஸ்வாமி !

நாட்டி : ஸிஸ்டர் ! ஏன் முகவாட்டம் ?

பத்மா : ஒன்றுமில்லே. என் கஷ்டங்களே நானே நினேத்துக் கொண்டேன்.

ஞாட்டி : எனக்குத் தெரியுமே, நீங்கள் வருத்தப்படுவது எல்லாம் நம்ம முகுந்தனைப் பற்றித்தான் என்று. முகுந்தன் எங்கே ஸிஸ்டர் ?

பத்மா : எங்கே போயிருக்கிறாரோ ?

ஞாட்டி : இன்னுமா வரலே ?

பத்மா : இல்லையே.

ஞாட்டி : நான் சொன்னாலும் அவன் கேட்கிறதே இல்லே, ஸிஸ்டர் ! ரொம்பக் கெட்டுப் போகிறான். அது போதாதென்று உங்கள் நிழலிலேயே இன்னொரு அயோக்யத்தனம் செய்து கொண்டிருக்கிறான், ஸிஸ்டர்.

பத்மா : அதென்ன அது ?

ஞாட்டி : அதுவா ! அதுதான் ராதாவின் விஷயம் !

பத்மா : ஐயோ ! உம்ம யோக்கியதையைக் காட்ட ஆரம்பித்து விட்டீரே ?

ஞாட்டி : (அசட்டுச் சிரிப்புடன்) ஸிஸ்டர் ! நம்ம யோக்யதை விஷயமாக, நீங்கள் ஸர்ட்டிபிகேட் கொடுக்கவேண்டியதில்லே. நான் எது சொன்னாலும், தகுந்த 'புரூப்' இல்லாமே சொல்லமாட்டேன், ஸிஸ்டர் ! ராதாவும், உங்க முகுந்தனும் சரச சல்லாபத்திலிருக்கும்பொழுது எடுத்துவைத்த போட்டோ இருக்கு இதோ !

பத்மா : நீர் கூறுவதை நான் நம்ப முடியாது. நீர் போய்விடும்.

ஞாட்டி : நான் போகிறேனம்மா ! அதற்கு முன் இந்த போட்டோவை ஒரு தடவை......

(ஒரு போட்டோவை, தன் சட்டைப் பையிலிருந்து எடுத்து பத்மாவிடம் கொடுக்கிறான்)

பத்மா : (ஆச்சரியத்துடன் அதைப் படக்கென்று பிடுங்கிக் கொண்டு) என்ன ஆச்சரியமிது ! ராதா ! தீர்ந்ததா உன் வாழ்வு ! சீ...என்ன ஜன்மமிது... ! அற்ப இன்பத்துக்கு ஆசைப்பட்டு, நான்கு பேர் முன்னிலேயில் நாணயமாக தலே காட்ட முடியாததோர் காரியத்தில் இறங்கி விட்டாயா ?

நாட்டி : ஸிஸ்டர், என் யோக்யதையைப் பற்றி பேச ஆரம்பித்தீர்களே ஸிஸ்டர் ! நான் சொன்னது வாஸ்தவம் என்று தெரியறதா ? நீங்கள் இப்படி சந்தேகப்படுவேள் என்று முன்கூட்டி யோசித்துத்தான் ஒரு போட்டோவையும் பிடித்து வைத்தேன். அப்பொழுதே இன்னொருவனுயிருந்தால் முகுந்த் செய்த காரியத்திற்கு ஷூட் செய்திருப்பேன் ஸிஸ்டர், ஷூட் செய்திருப்பேன். ஆனல்...

பத்மா : ஆனல் என்ன ? அப்படிச் செய்திருந்தாலும் நன்றுயிருந்திருக்குமே.

நாட்டி : (நாலாபுறத்திலும் பார்த்துக்கொண்டு) ஸிஸ்டர், உங்களுக்காகத்தான் பார்த்தேன். இன்னொரு விஷயம்.

(மறுபடியும் நாலாபுறமும் பார்த்து)

நான் அடிக்கடி இந்த வீட்டிற்கு வருவதெல்லாம் தங்களை உத்தேசித்தல்லாது வேறில்லே ஸிஸ்டர். தங்களுக்கும் என் மீதில் பிரியமிருக்கிறதென்று நம்பியிருக்கிறேன். அந்தக் கழுதை, மட சாம்பிராணி முட்டாள் முகுந்தனே ஒரு வார்த்தை சொல்லி விடுங்கள். க்ளோஸ் செய்து விடுகிறேன். வேண்டுமானல் இந்த ஜமீன்தார் கிழவனேயும் காலி செய்து விடுகிறேன். பிறகு நாமிருவரும் சுகித்திருக்கலாம்...கண்ணே !

(அருகே செல்கிருன். பத்மா சட்டெனத் திரும்பி, சிரித்த முகத்துடன்)

பத்மா : மிஸ்டர் நாட்டி, தயவு செய்து மன்னியுங்கள். உங்கள் பெயரைச் சொல்லலாமோ ?

நாட்டி : தாராளமாகச் சொல்லலாம்! நாகரீக தம்பதிகளுக்கு அதுதான் அழகு. (அசட்டுச் சிரிப்புச் சிரிக்கிறன்)

பத்மா : (புன்சிரிப்போடு) கொஞ்சம் இருங்கள். இந்த போட்டோவை டிராயரில் வைத்து வருகிறேன்.
(போகிருள். ரிவால்வரை எடுத்து வருகிருள். நாட்டி பாடி முடியும் சமயம் பத்மா ரிவால்வரை அவன் முன் காட்ட, நாட்டி திகிலடைகிருன்).

நாட்டி : ஐய்யய்யோ, ரிவால்வரா ?

பத்மா : ஹல்லோ நாட்டி! தூக்குங்கள் கையை. டார்லிங்காம் டார்லிங். திருட்டு நாயே! என்னெதிரிலேயே என் கணவரைத் தூஷிக்கிருயோ ? மடமே! நீ இந்த வீட்டிற்குள் கால் வைத்ததினமே, நீ பார்த்த பார்வையிலிருந்து உன் குணம் இத்தன்மையது என்று அறிந்து கொண்டேன். உன்னே இப்படியே விட்டுவிட்டால் அபலேகள் எத்தனே பேர்களுடைய மானங்கள் அழியுமோ தெரியாது. ஆகவே இக்ஷணமே உன்னே இத்துப்பாக்கிக்கு இரையாக்கிருலென்ன ?

நாட்டி : (திகிலுடன்) அப்பப்பா! கிணறு வெட்ட பூதம் புறப்பட்டாப்பலே ஆயிடுத்தே, அம்மா! ஐயோ...துப்பாக்கியை கீழே போடேன். நான் தெரியாமே செய்ததை மன்னிச்சுக்கோ தேவி...! இதோ.

(நாலா பக்கமும் பார்க்கிருன்)

பத்மா : அடே கள்ளா! எங்கே நழுவப் பார்க்கிருய்? நில் அப்படியே,

நாட்டி : அம்மா! நான் எங்கும் போகலேயே. உன் காலேப் பிடித்துக் கொள்கிறேன். என்னே மட்டும் உயிரோடு விட்டுவிடு. என் மானத்தைக் காப்பாத்திடு தாயே.

(காலில் விழுகிருன்)

பத்மா : சீ! வெட்கங்கெட்ட ஜன்மமே. உனக்கு மானம் வேறயா? மரியாதையாக இந்த க்ஷணமே, இந்த

பங்களா எல்லையை விட்டு ஓடிவிடு. இன்றுமுதல் இந்தப் பக்கமே தலை காட்டக் கூடாது. உம், தெரிந்ததா ?

(துப்பாக்கியை உயர்த்துகிருள்)

நாட்டி : (பயந்து) தெரிந்ததம்மா !

பத்மா : போ, வெளியே.

நாட்டி : (மெல்லக் கதவு பக்கம் சென்று, சற்றுத் தயங்கி, மறுபடியும் திரும்புகிருன்)

பத்...மா...

பத்மா : போகிருயா இல்லையா ?

நாட்டி : அந்தப் போட்டோவை மட்டும் கொடுத்துவிடேன். போயே போயிட்றேன்.

பத்மா : போட்டோவுமில்லை, கீட்டோவுமில்லை. போ வெளியே! இல்லாவிட்டால்...(துப்பாக்கியை உயர்த்துகிருள்).

நாட்டி : ஐய்யய்யோ ! போறேனே...(என்று அலறிக்கொண்டு ஓரே பாய்ச்சலில் வெளியே ஓடுகிருன்)

பத்மா : (துப்பாக்கியை மேஜைமீது வைத்துவிட்டு) ஐயோ ! ஜகதீசா ! இதென்ன பாழும் மனித ஜன்மங்கள். (அது சமயம் முகுந்த் ஓடியே வந்து)

முகுந் : அடியே பத்மா! உன்னைத்தாண்டின்னு! ஏண்டி அம்மா பேசமாட்டேங்கறே...? உ...உ...(அழுகிருன்) நீ பேசமாட்டேல்லியோ ? நான் சொல்றதை மட்டும் சொல்லி அழுதுவிட்டுப் போயே போயிட்றேன். (ராகத்தோடு) உங்க ஆத்துக்காரர் வரப்போருரே !

பத்மா : என்ன உளறுகிறீர் ? நீர்தானே ஆத்துக்காரர்...?

முகுந் : இல்லை பத்மா. உனக்கு ஆத்துக்காரராக வரவிருந்த முரளி வரப்போகிருனென்று சொன்னேன்.

பத்மா : (சந்தோஷத்தோடு) முரளியா...? வாஸ்தவமாகவா? எப்போழுது? எங்கே? எதற்காக? சொல்லுங்களேன்.

முகுந் : ஏ அப்பா! எவ்வளவு அவசரமடி! அழகாக கல்யாணம் செய்துகொண்ட நான் வந்தா பேசறதே கஷ்டமாயிருக்கு. முரளி வருகிருன் என்று சொன்னதும், வாயிலேருந்த பொலு, பொலு, பொலு பொலுன்னு வார்த்தைகள் கிளம்பறது! அடியே...ஏ....ஏ...! உஷாராயிரு.

பத்மா : போதும் உங்கள் சாமர்த்தியம், வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போங்கள். இல்லாவிட்டால்...

முகுந் : ஏண்டி, என்னைப் பயமுறுத்தவா செய்கிருய்! இதோ பார். (அவளது கழுத்தைப் பிடித்து நெறிக்கப் பார்க்கிருன். பத்மா அலறுகிருள். ராதா, கனபாடிகள் ஓடிவருகின்றனர். முகுந்தன் விலகி நிற்கிருன்).

கன : இதென்னடா கர்மம். பத்மா கழுத்தைப் பிடித்து நசுக்கி ஏண்டா கொல்லப் பார்க்கிருய்?

முகுந் : ஏ...கனபாடிகளே! பேசாதே!

கனபா : அட அதிகப் பிரசங்கி!

முகுந் : (உரக்க) பே... சா...தே (ஜமீந்தார் வருகிருர்).

ஜமீன் : இதென்னடா முகுந்தா, இங்கே கலாட்டா? வீடா லக்ஷணமா இல்லையே!

முகுந் : (தனக்குள்) அப்படின்ன சுடுகாடாவா இருக்கு?

கனபா : இந்த முகுந்த் வரவர ரொம்ப மோசமாகி வருகிருன், ஜமீன்தார்வாள்! பத்மா கழுத்தைப் பிடித்துக் கொல்லப் பார்த்தான்.

ஜமீன் : ஏண்டா, பொம்மனுட்டி மேலே கைபோடலாமாடா?

முகுந் : அப்படின்ன யார் மேலே கைபோடுவாளாம்? ஆம்பிளே மேலே கையைப் போட்டா, கையை ஒடிச்சுப் புடுவானே!

ஜமீன் : அடே முகுந்த்! அந்த அதிகப் பிரசங்கி முரளி இங்கே வரப்போகிருனுமேடா! போடான்னு. வேணுவைக் கூப்பிட்டு, முரளி வந்தான்னு கல்தா கொடுத்துத் தள்ளச் சொல்டா! என்னடா நிக்கிறே?

முகுந் : (தயங்கித் தயங்கி) இல்லே தாத்தா, வேணு இல்லே தாத்தா.

ஜமீன் ; என்னடா இல்லே! நீதான் போய், அவனேக் கல்தா கொடுத்துத் தள்ளுடா! போன்னு, நிற்கிருன் பாரேன்.

முகுந் : போறேன் தாத்தா. (தனக்குள்) எழவு தாத்தா! (முரளி பிரவேசிக்க) தாத்தா, முரளியே இதோ வந்துவிட்டான் தாத்தா. (தாத்தாவின் கோபக்குறிகள் காணுகின்றன. பத்மா சந்தோஷத்தோடு நிற்கிருள்)

முரளி : (கந்தல் உடையுடன் தாத்தாவின் காலில் போய் விழுந்து நமஸ்காரம் செய்து) தாத்தா என்னே மன்னிக்கணும்.

ஜமீன் : (கோபத்துடன்) சீ பிரஷ்டா! தலேவெட்டி. உன்னேத்தான் இந்த வீட்டிற்குள் காலடிகூட வைக்கக் கூடாதென்று எழுதி இருந்தேனே! உனக்கு இங்கே என்ன வேலே? சீ, போ! (முரளியைத் தள்ளிவிட்டு உள்ளே போகிருர்).

முரளி : ஐயோ, விதியே! (என்று தலேயிலடித்துக் கொள்கிருன். கண்களில் நீர் ததும்ப நிற்கிருன். முகுந்தன் ஓடியே வந்து அவனேக் கட்டித் தழுவி)

முகுந் : அப்பா முரளி, தாத்தா ரொம்பக் கோபமாயிருக்கிருர். அவருடைய குணம்தான் உனக்குத் தெரியாதா? அண்ணு இப்பொழுது போய்விட்டு வா. நான் தாத்தாவை எப்படியாவது கொஞ்சம் சமாதானம் செய்து வைக்கிறேன். அவர் சமாதானம் ஆனதும், உனக்கு வேண்டிய உதவியைச் செய்யும்படி...

முரளி : முகுந்தா! எனக்காக யாரும் எத்தகைய சிரமமும்எடுத்துக்கொள்ள வேண்டியதில்லையப்பா! என் தலைவிதி கஷ்டப்பட வேண்டுமென்றிருக்கும்போது, மற்றவர்கள் செய்யும் உதவி எவ்வளவு தூரம் உதவப் போகிறதப்பா?

முகுந் : முரளி! விதி விதி என்கிறுயே. எனக்கு உன்னைப் பார்த்தால் எவ்வளவு கஷ்டமாயிருக்கிறது தெரியுமா? ஐயோ! நீ எவ்வளவு அழகாக, எவ்வளவு சுகமாக இருந்து வந்தாய். இப்போ, (முரளியின் கிழிந்த உடைகளைப் பார்த்து) ஐயோ, உன் தேகம் எவ்வளவு வாடி வதங்கி விட்டது! உன் உடைகளெல்லாம் அழுக்கடைந்து கிழிந்து போயிருக்கே அப்பா (ஜமீன்தார், 'முகுந்த்! அடே முகுந்த்' என்று உள்ளிருந்தபடியே அழைக்கிருர்.) இதோ வந்துட்டேன் தாத்தா! முரளி! நீ இவ்வளவு கஷ்ட...(தாத்தா கூப்பிட) எழவு தாத்தா. வர்ரேன் தாத்தா! பாரப்பா முரளி! தாத்தா கூப்பிடுகிருர். நான் என்ன செய்றதப்பா? உன்னைப் பார்த்தால் எனக்குத் துக்கம் வர்ரது. (தாத்தா கூப்பிட) சீ வர்ரேன்! முரளி! இந்த எழவு கிழம் கூப்பிட்றது. போகாட்டா திட்டுமப்பா முரளி. ('முகுந்த்' என்று தாத்தா கூப்பிட) ஐயோ...!து...! போயிட்டு வர்ரேன் அப்பா. முரளி, நீயும் போயிட்டு வா. அப்புறம் காகிதம் எழுதுகிறேன். (கோபத்துடன் தாத்தா கூப்பிடுகிருர். முகுந்தன் கோபத்தோடு தரையில் மிதித்துவிட்டு) தரித்திர தாத்தா... (உரக்க) வந்துவிட்டேன். (ஓடுகிருன். முரளி போக முயல, பத்மா அவன் முன்வந்து நின்று, அன்புடன் அவனைக் கவனிக்கிருள்.)

முரளி : யாரது? பத்மாவா? பத்மா, என்னை ஏனம்மா தடை செய்கிருய்? நான் அனைவராலும் புறக்கணிக்கப்பட்டவன். தாத்தா என்னை வெறுக்கிருர். அவரது ஆதரவில் முகுந்தன் மனைவியாக இருக்கும் நீ என்னிடம்

அனுதாபம் காட்டுவதாகத் தெரிந்தால்கூட தாத்தாவுக்குக் கோபம் வரும். சற்றே வழிவிடேன்.

பத்மா: (துக்கத்துடன்) முரளிதரரே! உம்மீது எனக்குள்ள அன்பு எவ்வளவு என்பதை நீர் அறியீர்! அதை எடுத்துச் சொல்லவும் எனக்கு சக்தியில்லை.

முரளி: அம்மா, பத்மா! அதைப்பற்றி இப்பொழுது பேசிப் பயனென்ன?

பத்மா: ஐயோ! எனது விருப்பத்திற்கு மாருக என்னைப் பாழுங் கிணற்றில் தள்ளுவதைப் போன்ற காரியத்தைச் செய்துவிட்டார்கள். அது எப்படியாவது போகட்டும். என் மனம் எப்பொழுதும் தம்மிடமே இருந்து வருகிறது. என்னிடம் தங்களுக்கு உண்மையான அன்பு இருக்குமானல்...

முரளி: அதென்ன அவ்வாறு கூறிவிட்டாய் பத்மா? எப்பொழுதும் உன்னிடம் எனக்கு அளவற்ற அன்பு உண்டு. இப்பொழுது அது இன்னும் பன்மடங்கதிகமாய், சகோதரி பாவத்தில் பரிணமித்திருக்கிறது.

பத்மா: என்னிடத்தில் உண்மையாக அன்பு உங்களுக்கு இருக்குமானல் இதோ இந்த சங்கிலியை வாங்கிக் கொள்ளுங்கள். (கழற்றி முரளியிடம் கொடுத்து) இதைக் கொண்டு பணமாக்கித் தங்களது கஷ்டத்தைத் தீர்த்துக் கொள்ளுங்கள்.

முரளி: (துக்கம் பொங்க) பத்மா, அன்பு மிகுதியால் செய்யும் இச்செய்கையால் என் ஹிருதயத்தை உடைக்காதேயம்மா! வேண்டாம். இந்த பிக்ஷை எனக்கு வேண்டாமம்மா. நீயும் உனக்கு உப்பிட்டு வருபவருக்கு துரோகம் செய்து எனக்கு இந்த பிக்ஷையை அளிக்க வேண்டாம். எனக்கு வழிவிடு. வீணுக என் மனதைத் துன்பப்படுத்தாதே. எல்லோரும் என்னை சமமாகப் பாவித்து வரவேற்கும் நிலைமைக்கு என்னை உயர்த்திக் கொள்ளும்வரை, பொறுத்துக் கொள்.

இப்பொழுது என்னைத் தடை செய்யாதே. நான் சென்று வருகிறேன். (வேகமாகச் செல்கிறான்).

பத்மா: முரளி...முரளி...(உட் செல்லுகிறாள்).

(திரை விழுகிறது).

***காட்சி 16.***

## இடம்: தெரு

பாத்திரங்கள்: முரளி, வைத்தியநாதன்.

(முரளி தனியாக வாடி வதங்கி வருகிறான்)

முரளி: கடவுளே! இதுதானா என் விதி! எத்தகைய குற்றவாளிகளும் மன்னிக்கப்படுகிறார்களே. சமூக வாழ்வை ஆசாரமாகக் கொண்ட எனக்குத்தானா மன்னிப்பு கிடையாது? பெரியம்மா சொல்லைக் கேட்டு, சிறிது நம்பிவந்த நான் நிராதரவானேன். இனி என்ன செய்வதென்று தோன்றவில்லை. சரி, ஊரிலே நான் செல்வாக்குடன் இருந்தபோது சேர்ந்த நண்பர்கள், பலருள் யாராவது ஓரிருவர் எனக்குச் சகாயம் செய்துவிட்டால் போதுமே. பேசாது ஊருக்குத் திரும்பி விடலாமே. அதோ, வைத்தி வருகிறான்! நல்ல காலந்தான்.

(வைத்தியநாதன் பார்க்காதவன் போல் வருகிறான்)

முகுந்: ஹல்லோ வைத்தி! வைத்தி! (பின்னால் சென்று) வைத்தி, என்னைத் தெரியவில்லையா? முரளியப்பா.

வைத்தி: முரளியா? (யோசித்து) ஓ! முகுந்த் பிரதர் முரளியா? என்ன ப்ரதர் இப்படி போயிட்டீங்க?

முரளி: ஆம் அப்பா. எல்லாம் காலத்தின் பலன். இப்பொழுது என் மனைவி மக்களுடன் ரொம்பவும் கஷ்டப்படுகிறேன்.

வைத்தி : ஐயோ. (இரக்கத்துடன்) மை டியர் முரளி. வாஸ்தவ மாகவா ? ரொம்ப நல்லவனுச்சே நீ !

முரளி : அது இருக்கட்டும். இப்பொழுது உன் உதவியை நாடியே புறப்பட்டேன். நல்ல காலமாக நீயே வந்து சேர்ந்தாய். இந்த சமயம் இல்லை என்னுமல் ஏதாவது உதவி செய்யப்பா.

வைத்தி : முரளி ! இப்ப வந்து கேக்கறயே அப்பா ! போன மாஸம் பூரா என் கையிலே சும்மா அப்படிப் பணம் குப்பை குப்பையாக புரண்டு கொண்டிருந்தது. அப்போ வந்திருக்கப்படாதா ? இந்த மாசம் ஏக வரட்சி. அப்பா தெவசம். அம்பிக்கு ஸ்கூல் பைனல் பரிக்ஷைக்கு பணம் கட்டணும். வீட்டு வரி. திருப்பதி யாத்திரை. எல்லாம் ஒன்று சேர்ந்து வந்து தொலைஞ் சிருக்கு. நீயும் வந்திருக்கே. உன்னைப் பார்த்தா எனக்கு கஷ்டமாயிருக்கு. போயிட்டு வர்ரேன் ப்ரதர் ! நினைவிருக்கட்டும். குட் பை ! (என்று சொல்லிக் கொண்டே போகிருன். முரளி, 'வைத்தி ! வைத்தி!' என்று அழைத்துக் கொண்டே போகிருன்).

(திரைவிழுகிறது)

## காட்சி 17.

### இடம் : நந்தவனம்

பாத்திரங்கள் : முரளி, ராமு, கிட்டு, வேணு.

(ராமசாமியும், அவனது நண்பன் கிட்டுவும் உல்லாச மாக வருகின்றனர். முரளி ஒதுங்கி நிற்கிருன்.)

ராமு : கிட்டு ! அந்த, 'சார்மிங் கெர்ல்' நேற்று வந்தாப் போலே இன்றும் வருவாளா ?

கிட்டு : அடே ராமு ! மெள்ளப் பேசப்பா !

ராமு: உரக்கப் பேசிஞலென்னடா? 'லவ்' ஏற்படுவது எல்லோருக்கும் இயற்கைதானேடா?

முரளி: (அவர்களருகில் வந்து ஈனக் குரலில்) மை டியர் ராமு!

ராமு: (திகைத்துப் போய் திரும்பி) என்ன?

முரளி: ராமு. என்னைத் தெரியல்லையா? உன்னுடைய பழைய டியரெஸ்ட் ப்ரெண்ட் முரளியப்பா. இப்பொழுது பூவரெஸ்ட்! ஏழையிலும் ஏழையாக இருக்கிறேனப்பா. என்னைத் தெரியவில்லையா?

ராமு: (உதட்டைக் கடித்த வண்ணம் யோசித்துவிட்டு): இந்தத் திருட்டுப் பிச்சைக்காரப் பயலின் தெம்பைப் பார்த்தாயா? இந்தா பிடி. (ஒரு காலணுவை எடுத்து வீசுகிருன்).

முரளி: (அக்காசை சற்று நேரம் பார்த்துவிட்டு) ராமு! மை டியர் ராமு! என்னை நன்ருகக் கவனித்துப் பாரேன். நான் அப்படியா அடையாளங் கண்டுகொள்ள முடியாதபடி மாறிவிட்டேன்? நான் பிச்சைக்காரனல்ல ராமு.

ராமு: அட திருட்டு ராஸ்கல்! பிச்சைக்காரப் படவா! திரும்ப ராமு, ராமு என்று அழைக்கிருய். கிட்டு! பார்த்தாயா இந்தப் பிச்சைக்கார 'பிளாக் காடை'. நீ என்னை ராமு என்று அழைப்பதைக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு, கொஞ்சமாவது நெஞ்சிலே பயமில்லாமல் என்னைப் பெயர் சொல்லி அழைக்கிருன். அ...! பார்த்தாயா?

முரளி: (கண்களில் நீர் ததும்ப) ராமு! கந்தல் உடை உடுத்தி வந்திருக்கிறேன் என்று நான் செய்த உபகாரங்களை எல்லாம் மறந்து, என்னை இப்படி உன் சினேகிதனெதிரில் அவமானமாகப் பேசலாமா? ராமு! வேண்டாம். சற்று நினைத்துப் பார். என்னருமை ராமு! ராமு! உன்னிடம் பணம் காசு கேட்கவில்லை நான்.

என்னைப் பார்த்து, அன்பா என்று ஒரு வார்த்தை சொல். (கையைப் பிடித்து).

ராமு : அட பிச்சக்கார கூஸ்! என்னடா தொடுகிறயே! இது மாதிரி தகடி பிக்ஷை கேட்க எத்தனை பேரடா கிளம்பியிருக்கீங்க? இந்தப் பக்கிரிப் பயல் உதவி பண்ணிறுமே! கேட்டாயா, ராமு! ஹ...ஹ... (சிரிக்கிறன்).

முரளி : ராமு, என்னைக் கேலி செய்யாதே. நான் கூறுவது உண்மை. உன்னை மன்றுடுகிறேன். என்னை மட்டும் உன் நண்பரெதிரில் அவமானப்படுத்தாதே. (ராமு வின் தோளைப் பிடிக்கிறன். ராமு முரளியை ஒரு தள்ளு தள்ளுகிறன்).

ராமு : அட பரதேசிப் பயலே. மறுபடியும் மறுபடியும் என் பக்கத்தில் வந்து வாயாடாதே! வந்தால் பூட்ஸ் காலால் உதைப்பேன். கிட்டு! வா, போகலாம். கிடக்கிறன் பிச்சைக்காரப் பயல். (முரளி ஓடிப்போய் ராமுவின் கழுத்தைப் பிடித்து நெறிக்க ஆரம்பிக்க)

முரளி : (கோபத்துடன்) அடே திருட்டு நாயே! நான பிச்சைக்காரப் பயல்? அக்காலத்தில் வீடு வீடாகச் சென்று பவதி பிக்ஷாந்தேஹி என்று பிக்ஷை எடுத்தது யாரடா? நீயா நானடா? அடே! எரிநெருப்பை என்மேல் பற்றவிட்டாலும் பொறுத்துக் கொள்வேன். வயிற்றுக்கில்லாமல் வாடினாலும் வாடுவேன். ஆனல், அடே ராமு! என்னிடம் காசிருக்கிறவரை சினேகிதன்போல் வேஷம் போட்டுச் சுரண்டித் தின்று விட்டு, இப்பொழுது என்னையே தூஷிக்கும் உன்னைப் போன்றவர்கள் கூறும் வார்த்தைகளைக் கேட்கச் சகியேன். நீங்கள் இருப்பதும் பூமிக்குப் பாரமடா! (அதிகமாகக் கழுத்தை நெறிக்க, கிட்டு ஒன்றும் தெரியாது அங்குமிங்கும் ஓடுகிறன். ராமு சிரமத்துடன் விடுவித்துக்கொண்டு முரளியை பூட்ஸ் காலால் ஒரு

உதை உதைத்துத் தள்ளிவிட்டு, வேகமாக ஓடுகிருன். முரளி அதிக துக்கத்துடன் எழுந்து உட்கார்ந்து)

முரளி : (துக்கம் பொங்க) அட நன்றி கெட்ட பயல்களா! கூட இருந்து குடியைக் கெடுக்கும் துரோகிகளா! அடே! எங்கள் கையில் பணம் இருக்கும் வரையில் பலாப் பழத்தைச் சுற்றிவரும் ஈக்களென மொய்த்துக் கொண்டிருந்துவிட்டு, இப்பொழுது கஞ்சிக்கில்லாது தவிக்க ஆரம்பித்ததும், என்னை விட்டு ஓடி விட்டீர் களே. அட விஸ்வாசகாதகர்களா! நீங்கள் அவதிப் படுவது, அதனைக் காணச் சகியாது, எங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் உங்களுக்காக கொடுக் கத் துணிகிறோம்! ஆனால் எங்கள் உப்பைத் தின்று உஜ்ஜீவிக்கும் நீங்கள், எங்களையே புறக்கணிக்கத் துணிகின்றீர்கள். ஐயோ, பாழும் உலகமே! இரக்க மற்ற பைசாசங்களா! ஐயோ, என் முல் நில்லாதீர் கள். என் ரத்தமனைத்தையும் உரிஞ்சிவிட்டு இப் பொழுது உதறித் தள்ளத் துணியும் பேய்களா! அப்பால் போங்கள். ஐயோ! போய்விடுங்கள். முரளி, இப்பொழுது பிக்ஷாண்டியாகி உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றித் தெருத் தெருவாகத் திரியும் (விம்மி விம்மி அழுது) முரளியின் முன்னால், உங்கள் முகத்தை காட்டவேண்டாம். போங்கள், போங்கள். (சற்று நிதானித்து) சரி. நண்பர்களின் யோக்யதை யைப் பார்த்தாய்விட்டது. இனி என்ன செய்வது? ஐயோ வறுமையே! உனக்கு இருப்பிடமாகக் கொள்ள வேறு இடம் அகப்படவில்லையா? நான் தானு உனக்குக் குறியானேன்? ஐயோ! சம்சாரக் கடலில் அகப்பட்டுத் தத்தளிக்கும் என்னிடமா வந்து சேர்ந்தாய்?

(வருந்துகிருன் முரளி. அச்சமயம் அங்கு வேணு வருகிருன்.)

வேணு : சின்ன எஜமான், கும்பிட்றேன்.

முரளி: (கண்களைத் துடைத்துக் கொண்டு, திரும்பிப் பார்த்து) அப்பா வேணு. சௌக்கியந்தானா?

வேணு: உங்க ஆசீர்வாதத்தாலே சுகமாகத்தானிருக்கேனுங்க. ஆனா நீங்க இருக்கிற நிலைமையைப் பார்க்க சகிக்கலைங்களே! சின்ன எசமான், உங்களை வெறுத்துத் தள்ளின இந்த ஜமீன்தார் வீடு உருப்படப் போகுதுன்னு நினைக்கிறீர்களா? அவருக்குக் கனபாடி உபதேசம் நல்லா ஏறிப் போச்சுதுங்க. அவரென்ன செய்வாரு?

முரளி: அப்பா வேணு, உனக்கு உப்பிடுபவரை இப்படி ஏனப்பா தூஷிக்கிறாய்? என் தலைவிதி நான் அவதிப் படுகிறேன். இதற்காகப் பிறரை நோவதில் என்ன பயன்? சூரியனைச் சூழும் மேகம் நிரந்தரமாகவா அவனை மறைத்து விடுகிறது? சில மணிகள் கழித்தோ அல்லது நாட்கள் கழித்தோ அகன்றொழிகின்றன அல்லவா? அம்மாதிரி என்னைச் சூழ்ந்திருக்கும் கஷ்டங்கள் என்றாவது ஒரு நாள் அகன்றே தீரும். அது வரை இப்படியே அவதிப்பட்டுத்தானாக வேண்டும்.

வேணு: எசமான், அடியேன் ஒரு யோசனை சொல்றேன், கேளுங்க. இந்த அடிமை வார்த்தையைத் தட்டக் கூடாது. உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு.

முரளி: வேணு! சொல்லப்பா. உன் யோசனையைக் கேட்கலாம்.

வேணு: எசமான், நீங்களும், உங்களுக்குக் கல்யாணமாகி யிருக்கிறதாகச் சொல்லுகிறார்களே அந்த அம்மாவும்...

முரளி: ஒரு குழந்தைகூட இருக்கப்பா!

வேணு: அப்படிங்களா? ஐயோ, அப்படியானா நீங்கள் இரண்டு ஆத்துமாவைப் பட்டினி போட்டு வைச்சிருக்கீங்க. ஐயோ கடவுளே! ஏழை ஒரு யோசனை சொல்றேன் கேளுங்க. நான் இவ்வளவு நாள் ஜமீன்தார் வீட்டிலே ஊழியம் செய்து சிறுகச் சிறுக பல வருஷங்களாகச் சேர்த்து வைத்த பணம் ஆயிர

ரூபாய் இருக்குதுங்க. அதைத் தாரேன். அதை நீங்களே எடுத்துக்கினு, ஏதாவது வியாபாரம் செய்து பிழைச்சிக்கிடுங்க. கடவுளிருக்காரு! இந்த அடிமை சொல்ல நினேச்சது இதுதானுங்க. ஏதோ கீழ் ஜாதிக்காரன் சொல்ருனேன்னு குறைச்சலா நினேச்சு என் யோசனையைத் தள்ளிப்புடாதிங்க. உங்க காலேப் பிடிச்சுக் கும்பிடுகிறேன். (முரளியின் காலேப் பிடித்துக் கொள்கிருன்).

முரளி: (சட்டெனக் குனிந்து வேணுவைக் கட்டி அணைத்துத் தூக்கி நிறுத்தி, தன் கண்களில் நீர் ததும்ப) ஐயோ வேணு! உனக்கிருக்கிற உயர்ந்த குணத்தில் லக்ஷத்தில் ஒரு பங்குகூட என் ஆப்த சிநேகிதர்களிடம் இல்லேயே. நீ கீழ் ஜாதிக்காரன் என்று உன்னேக் கூறிக்கொண்டாய்? இல்லே, இல்லே! நீயே உயர்ந்த ஜாதிக்காரன்! அப்பா வேணு, நீயே எனக்கு அண்ணனும் தம்பியுங்கூட! ஆனல் நீ மனமுவந்து செய்ய வரும் உதவியைப் பெற நான் இப்பொழுது அருகனல்லன். வெகு துணிச்சலுடன் சம்சார சாகரத்தில் என்னிஷ்டம்போல் இறங்கிவிட்டேன். இனி எது வரினும் சரி. இந்த சம்சார பந்தத்தின் எல்லே எது என்பதைக்கண்ட, பின்னரே அதை விடுத்து வருவேன் நான். என்னே இப்பொழுது நிர்ப்பந்தப்படுத்தாதே! நான் போகிறேன்.

வேணு: எசமான், எசமான்! ஐயோ, எசமான்! இப்படி ஒரே பிடிவாதமாகத் தடுக்கிறீங்களே! இந்த என் ஒருவேளே ஆகாரமாவது ஏற்றுக்கொண்டு பசி ஆறக்கூடாதா? அதையாவது தள்ளாதீங்க எசமான்!

முரளி: எங்கே தள்ளுகிறது! உன்னுடைய அன்பு வெள்ளம், நான் போடும் அணையை உடைத்துச் செல்கிறதே! வா. உன் இஷ்டப்படியே! (போகிருர்கள்).

(திரை விழுகிறது.)

காட்சி 18.

## இடம் : ஏழை வீடு

பாத்திரங்கள் : மாதவராவ், சேவகன், மீனு, சரஸா, குழந்தை சந்துரு.

(சரசாவின் தகப்பனர் மாதவ ராவ், சூட் ஹாட்டுடன் வருகிருர். அவருடன் ஒரு சேவகன் ஸூட் கேஸ் ஒன்றை எடுத்துக்கொண்டு வருகிருன்,

மாதவ : ஓ! இதுதான் முரளியின் வீடோ? இது என்ன இவ்வளவு அழகாக இருக்கிறது! முரளி ஜமீன்தார் பேரனென்ருனே?

(மீனுக்ஷியம்மா அருகே வந்து மாதவ ராவை உச்சி முதல் உள்ளங்கால் வரை பார்த்து)

மீனு : இதென்னடா கிரகசாரம்! நீங்கள்ளாம் யாரு? இப்படித் திறந்த வீட்டிலே நாய் பூர்ராப்போல பூந்து வந்துட்டேளே! இதென்ன ரோட்டா? போங்கோ வெளியிலே! பீடைகளே!

மாதவ: பேஷ்! இது மாப்பிள்ளை வீடானுல், இங்கே நம் சரசா இருப்பது வாஸ்தவமானுல், இந்த வீட்டில் இந்த வேட்டை நாய் இருப்பது ஏனே? அம்மா முரளிதரர் வீடு இதுதானு?

மீனு: சிக்காபூர் ஜமீன்தார் பேரன் முரளியைக் கேட்கிறீர்களா?

மாதவ: ஆம். நீங்கள் யார் தெரியலையே?

மீனு ; என்னைத் தெரியாதா? (சிரித்துக்கொண்டு) நான்தான் சிக்காபூர் ஜமீன்தார் ராமச்சந்திரய்யரின் பெரிய பிள்ளையை அக்னி சாக்ஷியாக மணந்த...அய்யர் பாரியை, சாக்ஷாத் மீனுக்ஷியம்மா அவர்கள் நான். தெரியலையா?

மாதவ : ஓஹோ ! முரளியின் பெரிய தாயாரோ நீங்கள் ! சந்தோஷம்.

மீனு : ஆமாமா ! வாங்கோ இப்படி.

மாதவ : அது சரியம்மா, முரளிதரர் எங்கே ?

மீனு : அவனு ? அவன் ஊரிலேயே இல்லே. சிக்காபூருக்குப் போனுன், பண உதவி கிடைக்குமோன்னு பாக்கறதுக்கு.

மாதவ : பண உதவியா ? அப்படிப்பட்ட நிலைமை ஏன் வந்தது ? ஜமீன்தார் பேரனில்லேயோ ?

மீனு : ஜமீன்தார் பேரன்தான். யாரோ நாசமாப் போற ஒரு தீவட்டி கலெக்டராம். பண்டிதப் பொணம். அவன் பொண் புராசாவோ, சரசாவோ, அந்த தரித்திர நாயைக் கட்டிண்டு வந்தான். அன்னிக்கு ஆரம்பிச்சது கிரகசாரம். எழவு பொணம் வீட்டிலே கால் வச்சது, வீடு கட்டை மண்ணுப் போயிடுத்து. அதுவும், அதை எங்க கண்ணு முரளி கழுத்திலே கட்டிவிட்ட தீவட்டி கலெக்டர் கட்டலே போறவனும் ஒழிஞ்சு போனு, முரளிக்கு க்ஷேமம்.

மாதவ : (கோபத்துடன்) டாம் நான்சென்ஸ் !

மீனு : டாம், டுஸ்புஸ் ! எல்லாம் தெரியும் போடா !

மாதவ : கிழமே. என்ன, வாயிலே வந்ததை உளருகிருய். நான் யார்னு தெரியலேயா ?

மீனு : ஏண்டா, நாய் மாதிரி விழறே ? அப்பவே நினேச்சேன், இவன் யார், சள்ளென்று விழருனேன்னு !

மாதவ: சட் ! நான் யார்னு தெரியலே போலிருக்கு ! நான்தான் ரிடையர்டு டெபுடி கலெக்டர், மாதவ ராவ்.

மீனு : அட கட்டால போறவனே ! நீதானு சரசாவோட அப்பா ? பாரு, பாரு, உங்க பொண்ணோட வீட்டை. வந்தாளே மூதேவி மாதிரி...

மாதவ: சீ மூடு வாயை.

மீனு: சீ! சீ! நீ மூடு வாயை.

(அது சமயம் உள்ளேயிருந்து வந்த சரசா, 'அப்பா' என்று கூவிக்கொண்டு மாதவ ராவ் அருகில் போய் நிற்கிறுள்)

மாதவ: சரசா! இது என்ன கோலம்? இவ்வளவு கஷ்ட திசை ஏற்பட்ட காலத்திலும் எனக்கு இதைப் பற்றிய தகவலே நீ தெரிவிக்காதது ஏன்?

மீனு: ஏண்டி சரசா! கொஞ்சமாவது, நெஞ்சிலே பய மில்லாமே, குடுகுடுன்னு ஓடிப்போய் இன்னொரு புருஷன் பக்கத்திலே நிக்கறயேடி! தடிக்கழுதை! தரித்திரப்......

மாதவ: ஏ கிழவி! மூடு வாயை. ஜாஸ்தி பேசினயோ...

மீனு: ஜாஸ்தி பேசினு என்னடா சேஞ்சிடுவே? இந்த தரித்திர மூதேவியைப் பெத்த தீவட்டி கலெக்டர் துரையே, வாடா அப்பா, வா! பாரு ஒன் பெண் ணுேட அதிருஷ்டத்தை! ஐயோ! பெத்த வயத்திலே பிரண்டையைத்தான் வச்கிக் கட்டிக்கணும் (என்று சொல்லிக்கொண்டு, டபார் என்று தன் வயிற்றில் அடித்துக் கொள்கிருள்.)

மாதவ: டாம் நான் சென்ஸ்!

மீனு: டும் தஸ் புஸ்...!

சரசா: அப்பா. சற்றே பொறுத்துக் கொள்ளுங்கள். என் பெரிய மாமி கொஞ்சம் முன் கோபக்காரர். ஆனுலும் ரொம்ப நல்ல குணம் உள்ளவர்.

மீனு: ஏண்டி லண்டி! என்னைப் பார்த்து முன் கோபக் காரின்னு சொல்றே?

மாதவ: சரசா, இப்படி வா, அவளிடம் என்ன பேச்சு வேண்டி யிருக்கு? இருக்கிற சமாசாரத்தைச் சொல்லு.

சரசா : என்ன சமாசாரம் அப்பா ? ஒன்றுமில்லையே !

மாதவ : என்ன, பைத்யம் போல் ஒன்றுமில்லை என்கிருயே. உண்மையைச் சொல்லேன்.

சரசா : ஏதோ, கால வித்தியாசத்தால் சில மாறுதல்கள் ஏற்பட்டனவே தவிர, வேறு ஒன்றும் இல்லை அப்பா.

மாதவ : உன் நகைகளெல்லாம் எங்கே அம்மா ?

சரசா : எங்களது தினசரி காலக்ஷேபத்திற்கு உதவி செய்யச் சென்று விட்டன.

மாதவ : ஜமீன்தார் பேரனது கதி இவ்வளவு லக்ஷணமாக இருக்கிறதா ? பேஷ் ! அதைப்பற்றி பிறகு யோசித்துக் கொள்ளலாம். சரசா, இப்பொழுது நீ என்னோடு ஊருக்குப் புறப்படு.

சரசா : ஊருக்குப் புறப்படுவதா ? அதேனப்பா ?

மாதவ : அதேனு ? குழந்தையின் நோயைக் குணப்படுத்தவும், சிரமமில்லாது இருக்கவும்.

சரசா : வேண்டாமப்பா. நான் இங்கேயே இருக்கிறேனப்பா.

மாதவ : அட பைத்தியக்காரி. நல்லது சொன்னு உனக்கு மூளையில் ஏன் ஏறமாட்டேன் என்கிறது ? படிச்ச படிப்பு இவ்வளவுதானு ?

சரசா : படித்ததினுல்தான், புருஷன் மனையே சொர்க்க லோகம், புருஷனது சுக துக்கங்களில் மனைவி அவசியம் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும் எனும் உண்மையை அறிய முடிந்தது. அதன்படியே இப்பொழுது நடந்து வருகிறேன்.

மாதவ : சரசா ! போதும் உன் அதிகப் பிரசங்கம். பியூன் ! இப்படி வந்து குழந்தையை தோள்மேல் தூக்கிக்கொள். (பியூன் வந்து எடுத்துக் கொள்கிருன். சரசா மீனுக்ஷி அம்மாள் முன்னுல் நமஸ்காரம் செய்து எழுந்து)

சரசா : மாமி! போய் வரட்டுமா? என்னை மன்னிக்க வேண்டும்.

மீனு : அடி சிறுக்கி, நீயும் கிளம்பத் தயாராயிட்டாயா?

மாதவ : அதோட பேசினதெல்லாம் போதும். வா என் னுேடே! அது தனியாகக் கிடந்து சாகட்டும்.

(முன்னே வேலைக்காரன் போக, மாதவ ராவும், சரசாவும் அவன் பின் செல்கிருர்கள்)

மீனு : அட கட்டேலே போறவனே!

மாதவ : (சட்டெனத் திரும்பி) : ஏ கிழமே! இனிமேல் வாய் நோகிறவரை கத்து. (போகிருர்)

மீனு : சரி, சரசாவும் போயிட்டா. முரளி எப்போ வர்ராளுே தெரியலே. ஒரு வாரம் பார்க்கிறேன். இல்லாட்டா நானும் புறப்படறேன்.

(மீனு ஒரு புறம் போகிருள்.)

(திரை விழுகிறது)

## காட்சி 19.

### இடம் : தெரு

**பாத்திரங்கள் : முகுந்தன்.**

(முகுந்தன் கையில் கட்டாரியுடன் வருகிருன்)

முகுந் : இந்தக் கள்ளப்பய தாத்தா என்னென்ன வேலே செய்ய ஆரம்பிச்சுட்டான். அட ராமா! நான் என்னமோ குடிக்கிறேனும். அவர் சொல்றபடி ஆடலேயாம். நான் என்ன குரங்கா? இதுக்காக ஆத்திரம் வந்து தன் சொத்தையெல்லாம் என் பெண் டாட்டி பத்மா பேருக்கு எழுதி வச்சுட்டாராமே. பத்மா சொல்றபடி நான் நடக்கணுமாம். அட

கர்மமே. நல்ல வேளே நமக்கு நாட்டி சினேகிதனு வந்து வாச்சிருக்கானே. இல்லாட்டா இந்த கிழட்டுத் தாத்தா, பெண் பிசாசு பத்மா, திருட்டு நரி கனபாடிகள், அயோக்ய வேணு இத்தனே பேருக்கும் மத்தியில் இருந்து நான் சமாளிக்க முடியுமா? சரியான யோசனே சொல்லிக்கொடுத்திருக்கான். தாத்தாவுக்கு ரெண்டு நாளா உடம்பு சௌக்கியமில்லேன்னு. அவருக்கு திடீர் திடீர் என்று மூர்ச்சை ரோகம் வருகிறது. மூர்ச்சை போட்டு அஞ்சு நிமிஷத்துக்குள்ளே மருந்து கொடுக்காட்டா அவர் தீர்ந்து போய்விடுவார்னு டாக்டர் சொல்லியிருக்கிருர். ஆனல் ஒவ்வொரு தடவையும் அவர் மூர்ச்சை போட்டதும், இந்தத் தரித்திரப் பொணங்கள் பத்மாவோ, ராதாவோ, உடனே அவருக்கு மருந்து கொடுக்கிறது. அதைப் பத்திக் கவலே இல்லே. இன்னிக்கு ராத்திரி இந்தக் கட்டாரிக்கு தாத்தா ஸ்வாஹா! (போகிருன்)

(திரை விழுகிறது)

## *காட்சி 20.*

### இடம்: படுக்கையறை

**பாத்திரங்கள்:** ஜமீன்தார், பத்மா, ராதா, முகுந்தன், கனபாடிகள்.

(முகுந்தன் அதி ஜாக்கிரதையாக அடிமேல் அடி வைத்து பிரவேசித்து இருட்டில் அங்கிருந்த நாற்காலியைக் கவனியாது, அது இடற, 'ஐயோ, அப்பா' என்று அலறிக்கொண்டு கீழே விழுகிருன். தாத்தா, ராதா, பத்மா எல்லோரும் எழுந்து விடுகின்றனர்.)

**தாத்தா:** அடி ராதா! பத்மா! விளக்கைத் தூண்டு. சீக்கிரம், என்ன ஆச்சு?

பத்மா: என்ன இது கலாட்டா, யாரது அங்கே?

(ராதா விளக்கைத் தூண்ட, முகுந்தன் கட்டாரியை இடுப்பில் மறைத்துக் கொள்கிறான். பிறகு முழங் காலைப் பிடித்துக்கொண்டு, 'ஐயோ, அம்மா, உயிர் போகிறதே' என்று அலறி எழுந்திருக்கிறான்.)

பத்மா: உங்களைத்தானே! இது என்ன விளையாட்டு?

முகுந்: அடி பத்மா, நான் யார்னு தெரியலே? பகதூர் முகுந்த்! என்னை நீ அதிகாரம் செய்ய வேண்டிய தில்லை.

தாத்தா: அடே முகுந்தா! இது என்னடா ராத்திரி வேளை யிலே? அவளை ஏண்டா மிரட்றே?

முகுந்: இல்லை தாத்தான்னு! நான் ஆம்பிள்ளையோ இல்லியோ? (முணகிக்கொண்டு) இவ ஒரு பொம்ம குட்டி, என்னை அதிகாரம் செய்யறதுன்னு? இல்லே தாத்தா! நான் வந்தேன், இந்த எழவு நாற்காலி தடுக் கிடுத்து. விழுந்துட்டேன். ஐயோ! முழங்கால் வலிக்கிறதே. (சிணுங்குகிறான்.)

பத்மா: எங்கே? எந்தக் காலில்?

முகுந்: அடி பத்மா, நீ நல்லவளோல்லியோ, எனக்குப் பசிக் கிறதடி. கொஞ்சம் சாதம் பிசைஞ்சு போட்றியா?

தாத்தா: அட அசடே, நீ என்ன குழந்தையா?

முகுந்: (படுக்கையின்மீது உட்கார்ந்து) இல்லை தாத்தா, பத்மா, போயேண்டி தூங்க. (பத்மா போகிறாள்.)

தாத்தா: அப்பா முகுந்தா! எங்கடாப்பா போயிருந்தே? ராத்திரி இவ்வளவு நேரம் வெளியிலே என்னடா வேலை? மணி பன்னிரெண்டேகால் ஆகப் போறதே.

முகுந்: (நாக்குக்குளறிய வண்ணம்) மணி பன்னிரெண்டே கால் இல்லாவிட்டால், முப்பத்திரெண்டேகால் ஆகட் டுமே. எனக்கென்ன தாத்தா?

தாத்தா : வெளியிலே இவ்வளவு நேரம் என்னடா செய்தேன்னு ?

முகுந் : இல்லே தாத்தா. நக்ஷத்திரங்களை எல்லாம் எண்ணிண்டு இருந்தேன் தாத்தா.

தாத்தா : நல்ல ஜோலி போ. வான சாஸ்திரியாகப் போறியோ ? ஹி ஹி ! (இருமிக்கொண்டு) இதென்னடா உன்னிடமிருந்து ஏதோ சீமைச் சரக்கு நாத்தம் வர்ரது ?

முகுந் : நாத்தமா ? வாசனைன்னு சொல்லுங்கோ !

தாத்தா : சீ அதிகப்பிரசங்கி ! இது வேறே ஆரம்பிச்சுட்டயோ ! பேஷ் !

முகுந் : என் பெட்டியிலே பாச்சா ஜாஸ்தியாகப் போச்சு தாத்தா ! அதுக்காக சட்டைகள் மேலே பினைல் போட்டேன் தாத்தா ! அந்த வாசனை போலிருக்கு.

தாத்தா : கிரகசாரம், கிரகசாரம். எனக்கோ உடம்பு சௌக்கியமில்லே. பேசினு ஆயாஸமாக வருகிறது. நீ ஒரு பக்கம், எனக்குப் பெரும் மன நோவை கொடுக்கிறே ! முரளியின் சமாசாரம் ஒரு பக்கம் மனதை அறுக்கிறது. அப்பா போறும், ஏழேழு ஜென்மத்துக்குப் போறும் ; பேரன்களா வந்து வாச்சேளே ! (பெருமூச்சு விடுகிறார்.) ஐயோ ! என்னமோ செய்கிறதே எனக்கு ! அடே முகுந்த் ! ராதா ! பத்மா ! (கண்கள் உள்ளே சொருகிக்கொள்ள, தாத்தா மூர்ச்சையாய்ச் சாய்கிறார்.)

ராதா : (திடுக்கிட்டு) ஐயோ தாத்தா, தாத்தா !

முகுந் : (அங்குமிங்கும் ஓடி) அடி ராதா... தாத்தா, பத்மா, ராதா...மருந்து புட்டி எங்கேடி ? அடியே !

(பத்மா புட்டியுடன் வர, முகுந்த் அவசரமாக மருந்து புட்டியை வாங்குபவன் போல வாங்கி, அதைக் கீழே போட்டு விடுகிறான். மருந்தெல்லாம் சிந்திப் போகிறது)

ராதா : ஐயோ !

பத்மா : அட கர்மமே. (திகைக்கிருள்.)

முகுந் : ஐய்யய்யோ ! மருந்து கொட்டிப் போச்சே ! என்ன செய்யறது ? (கனபாடிகள் வந்து ஜமீன்தாரின் கையைத் தொட்டுப் பார்த்து) தீர்ந்தது...(சைகையால் தெரிவிக்கிருர் ) ஜமீன்தார் பைஸல் ! ஐயோ... தாத்தா...ஆ...ஆ ! (அழுகை)

(திரை விழுகிறது)

## காட்சி 21.

**இடம்: சிக்காபூர் ஜமீன்தார் வீட்டுக்கு வெளியில்**

**பாத்திரங்கள் :** வேணு, கனபாடிகள்.

(வேணு மூட்டை முடிச்சுகளைக் கட்டிக் கொண்டு எங்கோ பயணப்பட்டவன் போல் தனியாக வருகிருன்)

வேணு ; இனிமேல் இந்த வூட்டிலே நமக்கு வேலையில்லேன்னு கிளம்பிட்டேன். நம்ப முரளி எசமான், குளுந்த வேலையிலே அந்த மகாராஜன் பெயரைச் சொல்லணும். நான் எங்கிட்ட இருக்கிற பணத்தைக் கொடுக்கிறேன்னு சொன்னபோது வேண்டாம்னு சொல்லிட்டாரே. குப்பையிலே கிடந்தாலும் குந்துமணி குந்துமணிதான். உம் ! அவரிருக்கிற இடத்தைத் தேடிப் பிடிச்சுக்கினு, அவர் கிட்டேயே நாயாக உழைத்து என் காலத்தைப் போக்குகிறேன். சிவ ..சிவ...! அது யார்டா? (கூர்மையாக எதிர்ப்பக்கத்தைப் பார்க்கிருன்) வந்தாரையா கனபாடிகள். நானே இந்த ஊருக்கு ஒரே முழுச்சாகப் போட்டுட்றதுன்னு தீர்மானம் செய்தாச்சு. ஆகையினலே இந்தப் புண்ணியாத்மாவைக் கடைசி தடவையாகப் பார்த்து என் வவுத்துலே பொங்கிக்கிட்டு இருக்கிற எரிச்சலைக் கொட்டிப் புட்டுப் போயிட்றேன். வர ஆத்திரத்திலே அவனுக்கு

(தன் கையிலுள்ள தடியைத் தூக்கிப் பார்க்கிறுன்) இந்தத் தடிக் கம்பு தொரையாலே ரெண்டு பிரசாதம் கொடுத்து நொறுக்கித் தள்ளிடலாம்னு தோணுது! வரட்டும். (கனபாடிகள் வெகு டீக்காக சட்டை, கோட்டுடன் வருகிறுர். கனபாடி வேணுவைப் பார்க்கிறுர். வேணு அவரைப் பார்த்துப் பிரமித்து நிற்கிறுன்),

வேணு : அடே, கள்ளப் பேர்வழி. அடே திருட்டு கனபாடி சாமி!

கனபாடி : அடே! வழியில் நிற்காதேடா, தடி இடியட்!

வேணு : சாமி, சாமி, கொஞ்சம் பொறுங்க. கடைசியிலே என்னமோ தட்டு புட்டுன்னு சொன்னீங்களே, அது என்ன எளவு? இந்த ஆபத்து உங்க வாய்க்குள்ளார எப்படிப் புகுந்துச்சிங்க?

கனபாடி : இடியட், கூஸ்! போடா அப்பாலே. இல்லாவிட்டால் உன் பல்லை உடைத்து, கையிலே கொடுத்து, கல்தா கொடுத்து, பூட்ஸாலே உதைத்துத் தள்ளுவேன் தெரியுமா ?

வேணு : பூட்ஸா! அட! எப்பய்யா வந்தது அது? அட கள்ளக் கனபாடிகளே, பத்திரம்,

கனபாடி : அடே மடையா. இனிமேலே கனபாடி, கினபாடின்னு சொன்னியோ, பத்திரம்.

வேணு : அப்படீன்ன, நீ என்ன ஆயிட்டியோ?

கனபாடி : நான்தாண்டா ஜமீன்தார். போடா வெளியே பேசாமே!

வேணு: அடடா ஜமீன்தாருங்களா? ஜமீன்தாரு மூஞ்சியைப் பாருடான்னுன்! நீங்க சொல்றத்துக்கு முன்னுடியே இதோ பாரு; என் மூட்டையைக் கட்டிக்கிட்டு இந்த இடத்தை விட்டுக் கிளம்பிட்டேனே! இனிமேலே லட்ச ரூபாய் கொடுத்துப் பாரேன், நிற்கிறேனுன்னு பார்க்கலாம். திருட்டுப் பசங்க இருக்கிற இடத்திலே நமக்கு என்ன ஐயா வேலே? கனபாடி வேசத்துக் குள்ளார ஒண்ணுங் கிளாஸ் திருட்டுப் பய இல்லே மறைஞ்சி கிடக்கிறுன்.

கனபாடி: அடே! வாய்க் கொழுப்பாலே வீணுகக் கெட்டுப் போகாதே. இதோ பாரு உன்னே!

வேணு; இந்தா, மிரட்டாதே ஐயா, ரொம்ப. என் கையிலே என்ன இருக்கு பார்த்தியா? (தடியைக் காட்டுகிறுன்)

கனபாடி: ராம! ராம! (பின் வாங்குகிறுர்)

வேணு: சாமி! உன் வாயாலே அந்தக் கடவுள் பேரைச் சொல்லி ஏன் ஐயா அந்தப் பேரைக் கெடுக்கிறே? நீ சுத்திவர் ரியே அந்த அம்மாளுங்கோ பேரையே சொல்லிக்கிட்டு இரு. நான் போய் வர்றேன். பெருச்சாளித் திருட்டுக் கனபாடிகளே!

கனபாடி: அட ராஸ்கல்! (போகிறுன்) அப்பா! (பெருமூச்சு விடு கிறுர்) இந்தச் சனியனும் தொலேந்தது. இனிமே, அந்த நாட்டிப் பயல் ஒருவன்தான் இருக்கிறுன். அவனே யும் கோவிந்தா செய்துட்டா, அப்புறம் இப்போ ஏற் பட்ற கொஞ்சம் பயமுமில்லாமே, தைரியமாக நானே ஜமீன்தார்னு சொல்லிவிடலாம். இந்த பத்மா தன் கையில் இருக்கிற உயிலே பத்திரமாகப் காப்பாற்றிக்க ணுமே ஈஸ்வரா! முகுந்தன் மயக்கிவிடப் போகிறுன். ஒரு கண் பார்த்துக்கலாம். (போகிறுர்)

(திரை விழுகிறது)



முகுந்தனும் ராதாவும்

**காட்சி 22.**

**இடம் : ராதாவின் அறை**

**பாத்திரங்கள் : முகுந்தன், ராதா**

(ராதா தனியாக உட்கார்ந்திருக்கிறாள். முகுந்தன் மெதுவாக நுழைந்து)

முகுந் : (தனக்குள்) ஐயோ, ராதா மட்டும் தனியே இருக்கிறாளே. நல்ல சமயமிது.

ராதா : (திடுக்கிட்டு) என்ன முகுந்த்! இப்படி திடுதிப்னு வந்து பயங்காட்றியே ?

முகுந் : அம்மா, பயப்பட்டுட்டயா நீ? ஐயோ பாவம்! உட்காரு அம்மா இப்படி நாற்காலிமேலே. பரவாயில்லே.

ராதா : (உட்கார்ந்து) முகுந்த். என்ன இன்று குஷியா இருக்காப்பலே இருக்கே ?

முகுந் : (நாற்காலியின் கைப்பிடியின்மீது உட்கார்ந்து) எல்லாம் உனக்காகத்தான் ராதா. நீ தனியா எத்தனே நாளேக்குத்தான் இருந்து கஷ்டப்படுவே. இந்த பத்மா உன்னே சள் வெள்ளென்று விழறாளோல்லியோ ?

ராதா : அதுக்கெல்லாம் நாளு பயப்படறவ? இருந்தாலும் அப்படி நாய் மாதிரி விழறது பிடிக்கத்தான் இல்லே.

முகுந் : அதுக்குத்தான் எனக்கு ஒரு யோசனே தோன்றது.

ராதா : என்ன அது முகுந்த் ?

முகுந் : அதா? சொல்றேன். (மெள்ள ராதாவின் தோள் மீது கையைப் போட்டு) பாரு. இனிமேல் நானும் நீயும் ஜோடி. அப்படி இருக்க உனக்கு இஷ்டமாளு, அந்த பத்மாவை அண்ட விட்றதில்லே.

ராதா : முகுந்த்! நீ எனக்கு நல்லதைத்தானே சொல்லப் போறே ?

முகுந் : ஹி...ஹி... (பல்லைக் காட்டி) ஆமான்னு ?

ராதா : ஆனு, பத்மா வந்து, ஒரேயடியா திட்ட ஆரம்பிச்சுட்டா? கனபாடிகளும் கோவிச்சுக்குவாரே. ஏன்னு, தாத்தா சொத்தையெல்லாம் பத்மாவுக்கு என்னமோ வில்லோ கில்லோ எழுதி வச்சுட்டாராமே ? அதனுலே, அவதான் ஜமீன்தாரிணியாம்.

முகுந் : அவங்க கடக்கருங்க அல்பப் பசங்க.

ராதா : ஆமாம்.

முகுந் : இந்தா கையைப் பிடி. (கையை நீட்டுகிருள். ராதா பிடிக்கிருள்)

முகுந் : பலே ஜோர். என்ன ?

முகுந்தன்-ராதா-டுயட்

(ஓ ரஸிக சீமானேவா என்ற மெட்டு)

முகு : ஆஹா! உனக்கும் எனக்கும்தான் இருக்கும்
பொருத்தம்தான் உனக்கும் கொஞ்சம் தெரியும்

ராதா: அதை நினைக்கும் பொழுது மனம் துடிக்கும்
விதத்தை எடுத் துரைக்க வழியுமறியேன்

முகு: எக்ஸிபிஷன் பொம்மை உனைக் கண்டு—எனக்கு
எக்ஸலெண்ட் ஜோடியெனக் கொண்டேன்-வெரி
எக்ஸலெண்ட் ஜோடியெனக் கொண்டேன்

ராதா: வீண் கற்பனையெல்லாம் நினைந்து அற்புதமென
மகிழும் நற்பயன் இழக்கவேண்டாம்

முகு: அதை நினைக்கும் பொழுது மனம் இனிக்கும்
விதத்தை எடுத் துரைக்க வகையுமறியேன்

முகு: காலையிலே வாக்ஸால்

ராதா: மாலையிலே ?

முகு: ப்யூக் கார்

ராதா: அப்போ, ஜாலி டூர் ?

முகு: பாம்பே ஷ்யூர்-எப்படி

(பாட்டு)

ராதா: அதை நினைக்கும் பொழுது மனம் களிக்கும் விதத்தில் சுகம் அளிக்கும் நடனம்புரிவேன்

(இருவரும் ஆ .. ஹா, ஆ...ஹா ! ஆஹா...ஹ ! ஆஹா...ஹ ! ஆஹா...ஹ ! என்று பாடிக் கொண்டே கைகோத்து நடனமாடுகிருர்கள். முடிவில் பார்வதி பரமசிவன் மாதிரி 'போஸ்' கொடுத்து நிற்கிருர்கள். நாட்டி திடீரென்று தோன்றி)

நாட்டி : பலே...பலே ! ஜோர். ரொம்ப சரியான ஜோடி. ஆஹா ! பார்வதி பரமேஸ்வராளைக் கண்டாப்பலேயே இருக்கே. ஆஹா ! (கன்னத்திலடித்துக்கொள் கிருன்)

முகுந் : ஹல்லோ ! நாட்டி வரணும். வரணும். ராதா என் ரூமிற்குப் போய் டிரிங்க்ஸ் கொண்டுவா, நாட்டிக்குக் கொடுக்கணும்.

( ராதா போகிருள் )

நாட்டி : முகுந்த்! பெண் வேட்டையிலே ரொம்பக் கெட்டிக் காரனயிட்டே!

முகுந் : அதற்கெல்லாம் நீதானடா வாத்தியார்.

நாட்டி : முகுந்த்! பெரிய ஜமீன்தாராயிட்டே ! எங்கிட்டே இப்போ ஒண்ணுமே சொல்றதில்லே.

முகுந் : அதெல்லாம் ஒண்ணுமில்லே. என்னடா சொல்லணும் ?

நாட்டி : ராதா—முகுந்த் 'ரொமான்ஸ்' பற்றி.

முகுந் : ஊஹூம் !.

நாட்டி : சொல்டான்ன !

முகுந். ஐயோ, நான் மாட்டேன்.

நாட்டி : சொல்லுடான்ன ?

முகுந் : ஐய்யய்ய !...சொல்ல வெக்கமாயிருக்கே. (வெட்கப் பட்டுக்கொண்டே, 'ஐய்யய்ய சொல்ல வெட்கமாகுதே, அவ ஜடையைப் பிடித்து பற்றி இழுத்து; கட்டி...ஐய்யய்ய சொல்ல வெட்கமாகுதே !' என்று பாடுகிருன்)

நாட்டி : பேஷ் தர்ம காரியம் நடக்கட்டும்.

முகுந் : ராதா, என்னடி? என்ன பண்ணிண்டிருக்கே ? எங்கே ட்ரிங்க் ?

(திரை விழுகிறது)

## காட்சி 23.

இடம் : தெரு

பாத்திரங்கள் : முரளி

(முரளி சரஸாவைக் காணது வாடிய வண்ணம் வருகிருன்.)

முரளி : ஐயோ சரஸா ! குழந்தையின் முகத்தைப் பார்த்து என் கஷ்டங்களை மறந்திருந்தேனே. அதையும் கெடுத்தாயா ? என்ன கஷ்டம் வந்தாலும் தங்களிஷ்டப்படியே நடக்கிறேன் என்று சொல்லி வந்தாயே. அதையெல்லாம் மறந்து உன் அப்பாவிற்குக் கடிதம் எழுதி வரவழைத்தாயா ? சீ, என்ன பெண்

கள்! கட்டிய கணவனிடங் கூருது அவன் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்க, தான் மட்டும் சுகமனுபவிக்க நினைக்கின்றனரே. (சற்று நிதானித்து)

சீ, என்ன யோசனை இது? சரசா அப்படிப்பட்ட காரியம் செய்திருப்பாளா? ஒருக்காலும் செய்திருக்க மாட்டாள். யாரோ தகவல் தெரிவித்ததின்பேரில் என் மாமனுரே வந்து கட்டாயப்படுத்தி அவளை அழைத்துப் போயிருக்க வேண்டும். எதற்கும் என் கண்மணி சரசாவையும், சந்துருவையும் போய்ப் பார்த்து விட்டு மறு வேலை பார்க்கிறேன். (போகிருன்)

(திரை விழுகிறது)

## காட்சி 24.

### இடம்: மாதவராவ் வீடு

பாத்திரங்கள்: சரசா, மாதவராவ், சுப்பன், முரளி, பையன் சந்துரு.

(சரசா தனியாக அமர்ந்து ஏதோ பத்திரிகையை வாசித்துக் கொண்டிருக்கிருள்)

சரசா: (தனக்குள்) பெண் ஜென்மம் எடுப்பதைப் போன்ற பாபம் வேறில்லை. தனக்கும் பிறருக்கும் அவதியை விளைவித்துக் கொள்ளவே பிறந்திருக்க வேண்டும் பெண்கள்! எதிர்பாராத துன்பங்கள் அடுக்கடுக்காய் வந்துகொண்டிருக்கின்றன. நான் எவ்வளவு சொல்லியும் கேளாது என் தந்தை என்னை இங்கே அழைத்து வந்து விட்டார். சொந்தக் கணவரது பெயரைச் சொல்வதும் கூடாதென்று கூறும் என் தந்தையின் மனப் போக்கை என்னவென்று சொல்வது? ஐயோ

பாழும் உலகமே! கொண்ட கணவர் பாக்யவானுக இருந்தாலும், பரம தரித்திரனுக இருந்தாலும் அவரது மனைவிக்கு ஒன்றுதானே! அவரது சுக துக்கங்களில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டியதுதானே அவளது கடமை. என் கணவர் என்னென்ன கஷ்டங்களுக்கு ஆளாகி ஊருக்குத் திரும்பியிருக்கிருரோ? என்னையும் குழந்தையையும் காணுது மனதில் என்னென்ன நினைக்கிருரோ? என்னைப் பற்றி எவ்வளவு இழிவாக நினைக்கிருரோ? அல்லும் பகலும் இதே கவலையாக இருக்கிறதே. குழந்தைக்கு உடம்பு குணமாகி இப்பொழுது சுகமாகச் சுற்றி வருவதைக் கண்டால், அவர் எவ்வளவு சந்தோஷம் அடைவார்.

சரசா—பாகேஸ்வரி—திஸ்ரம்

**அந்தோ என்ன வாழ்விதுவே அரும் சுக மிழந்தேனே**
**ஆதரவது பூதலமிதில் ஏதுமிலா (அந்தோ)**
**அன்பும் ஆற்றல் அறிவும் நிறைந்த அன்பர் ப்ரேமை நாடும்**
**என் ஆசையது நிராசையதாய் ஏதமே நிறைந்தாலே**
**(அந்தோ)**

**விதியென்பேனே வினையென்பேனே கதியும் வேறிலேன்**
**விசனத்தாலே வாடவே கடவுள்-சித்தமிதுதானே (அந்தோ)**

(அவள் பின்னுல் மாதவ ராவ் வந்து, சப்தம் செய்யாது நிற்கிருர்)

மாதவ: சரசா! நீ இன்னும் அந்த மடசாம்பிராணியையே நினைத்துக்கொண்டிருக்கிருப் போலிருக்கிறதே. சரசா! உனக்கு எத்தனைதடவை சொன்னுலும், விடமாட்டேனென்கிருயே! தன் மனைவியை வைத்துப் போஷிக்கத் தெரியாத 'இடியட்', அவனைப் பற்றிய நினைவே கூடாது, தெரியுமா?

சரசா: அப்பா, ஒரு வார்த்தை. தங்களுக்கு அவர் 'இடியட்'டாகத் தோன்றலாம். அவர் என் கணவர். என் வாழ்வின் பொறுப்பாளி.

மாதவ : (கோபத்துடன்) போதுமடி படிச்ச முட்டாளே! இப்படித்தான் ஒரு பெண் தன்னுடைய அப்பாவிடம் கரட்டு வழக்குப் பேசச் சொல்லியிருக்கிறதோ, நீ படிச்ச புஸ்தகங்களிலே ?

சரசா : கரட்டு வழக்காடச் சொல்லவில்லை அப்பா. யாராவது ஒருவர் சொல்வதோ, நடப்பதோ தவருகத் தோன்றினுல், அதைத் திருத்தத்தான் சொல்லியிருக்கிறது.

மாதவ : சரி, சரி. படித்துப் படித்துத்தான் பொம்மனுட்டிகள் இப்படி மண்ணுப் போகிருர்கள். சீக்கிரம் போய் நன்ருக டிரஸ் செய்துகொண்டு வா.

சரசா : எதுக்கப்பா ? எங்கே போகணும் ?

மாதவ : நேரமாச்சு. நீ வேறு நல்ல உடை உடுத்திக்கொண்டு வா, சீக்கிரம்னு. சொன்னுக் கேளு. 'அப்டுடேட் பாஷன்'லே இருக்கணும் 'டிரெஸ்.'

சரசா : அது சரியப்பா. என்னை எதற்காக 'டிரஸ்' செய்துகொண்டு வரச் சொல்கிறீர்கள் ?

மாதவ : இன்று நாம் 'கிளப்' பிற்குப் போகப்போகிருேம்.

சரசா : டிபன்தான் வீட்டில் ரெடியாக இருக்கிறதே. தவிர ஸ்திரீகள் ...

மாதவ : (சிரித்துக்கொண்டே) காபி கிளப்பிற்கு இல்லையம்மா. லேடீஸ் கிளப்பிற்கு.

சரசா : அங்கே எனக்கு என்ன வேலை ?

மாதவ : இன்று அங்கே ஒரு வைபவம் நடக்கப் போகிறது.

சரசா : எதைக் குறித்து ?

மாதவ : அநாதைகளாக ஊரில் எத்தனையோ பெண்மணிகள் அவதிப்படுகின்றனரல்லவா? அவர்களுடைய கஷ்டங்களைப் போக்குவதற்காக இவ்வூர் லேடீஸ் கிளப் அங்கத்தினர்கள் ஒரு தீர்மானம் செய்தனர். அதற்காக, சென்ற வாரம் இரண்டாயிர ரூபாய் அவர்

களுக்கு நன்கொடையாகக் கொடுத்தேன். அது காரணமாக எனக்கு இன்று அவர்கள் ஒரு டீ பார்ட்டி வைக்கப் போகின்றனர். எல்லோரும் என்னை எவ்வளவு பாராட்டுகிறார்கள் என்பதை நீயே நேரில் வந்து பார்க்கவேண்டாமா? புறப்படு. போகலாம். (புறப்படுகிறார்).

சரசா: அப்பா, கொஞ்சம் நில்லுங்கள். நான் எதற்கு அங்கு வருவது?

மாதவ: அடி பைத்தியமே. உன்னை எல்லோருக்கும் அறிமுகப் படுத்தப் போகிறேன்.

சரசா: என்னவென்று?

மாதவ: என் அருமைப் புதல்வி சரசா என்று.

சரசா: அவர்களெல்லோரும் என்னைப்பற்றி என்ன நினைப்பார்கள்?

மாதவ: இதிலென்ன சந்தேகம் வந்ததம்மா? ரிடையர்டு டெபுடி கலெக்டர் மாதவ ராவின் பெண் இவள், அதி மேதாவி, ரொம்பப் படித்திருக்கிறாள், மாதர் சமூகத்திற்கே அவள் ஒரு மணி என்றெல்லாம் நினைப்பார்கள்.

சரசா: இல்லை அப்பா, இவள் மிகவும் நெஞ்சழுத்தமுள்ளவள், கொண்ட கணவன் பிக்ஷாண்டியாக ஊரில் திரிந்தலைய, இவள் மேனுமினுக்குக் காரியாக வளைய வருகிறாள் என்றெல்லாம்தான் உண்மையில் எண்ணுவார்களப்பா!

மாதவ; சீ, அதிகப்பிரசங்கி! உன்னைப்போல் அவர்களும் மடையர்கள் என்று எண்ணிவிட்டாயோ? அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு ரத்னமென்றுங்கூடக் கூறலாம். இது மாதிரி அல்ப யோசனைகள் அவர்கள் மூளைக்கு எட்டக்கூட எட்டாதே. சமூகத்தை முன்னேற்றவேண்டும் எனும் ஒரு கொள்கையைத் தவிர, அவர்களுக்கு வாழ்வில் வேறு வேலை ஏதுமில்லை.

சரசா : வாஸ்தவம் அப்பா. நீங்கள் கூறுவதெல்லாம் வாஸ் தவமே. என்னைப் போன்றவர்கள்தான் வீட்டி லடைந்து கிடைப்பார்கள். "லேடீஸ் கிளப்" மெம் பர்களைப் போல் உள்ளவர்களே சமூகத்தைச் சீர் தூக்க வந்த புண்யாத்மாக்கள். லேடீஸ் கிளப்பில் அவர்கள் செய்யும் காரியங்கள்தான் என்ன? பழைய காலங்களில் சில வாயாடிப் பெண்கள் ஒன்றுகூடி வம்பளப்பார்கள். அத்தகைய வம்பளப்பு, "லேடிஸ் கிளப்" என்று பெயரின்கீழ் நடக்கிறது. இவற்றால் சமூகம் முன்னேறிவிடுமல்லவா? இந்த வாயாடி மாதர் கள் சபைக்கு நீங்கள் நன்கொடை கொடுத்துவிட்ட தாக ஜம்பம் அடித்துக் கொள்ளுகிறீர்கள்! அநாதை யரைக் காப்பாற்றவா போகிறீர்கள்? ஐயோ! போகட்டும்! எத்தகைய கண்யமான நோக்கம்! அடாடாடா! தன் வீட்டில் கணவனை விட்டுப் பிரித் துக்கொணர்ந்த மகள் அநாதியாகி நிற்கிறாள். அவளது கணவனுக்கு உதவி செய்து, அவளை நாதியுள்ளவ ளாக்க வகையைக் காணோம். அந்த வைபவத்தைக் காண என்னை வரும்படியாகக் கூப்பிடுகிறீர்களாக்கும்! பேஷ்!... (துக்கத்தோடு) ராத்திரி பகலாய் என் கண வரது நிலைமையைக் குறித்து எண்ணி மனம் புழுங்கி...

மாதவ : (அதுவரை வியப்புடன் அவளது வார்த்தை களைக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு)

ஷட் அப்! போதும் உன் அதிகப் பிரசங்கம். தந்தைக்குப் புத்தி புகட்ட வரும் தடிபஜாரி! யாருக்குப் புத்தி சொல்ல வருகிறாய்? ஊராரெல்லாரும் என்னை வானளாவப் புகழ்கின்றனர். அவர்களுக்குத் தெரிந்ததைக் காட்டிலும் உனக்கு ரொம்பத் தெரிந்து விட்டதோ?

சரசா : தெரியாவிட்டால் அதனால் குடி முழுகிப் போகவில்லை யப்பா. ஆனால் நான் தங்களுடன் "லேடீஸ் கிளப்" பிற்கு வரச் சம்மதப்படவில்லை.

(காலிலுள்ள பூட்ஸைக் கழட்டிப் போட்டு விட்டு, விர்ரென்று உள்ளே செல்கிருள்.)

சீ! இதேதடா இவள், நம் வாழ்க்கையில் ஒரு முள்ளாக வந்து வாய்த்தாள். நாம் நினைத்ததென்ன? ஆனால்......

(டிபுடி கலெக்டர் கோபமாய் இருக்கிருர். அப்பொழுது யாரோ வந்திருக்கிருர் என்று வேலையாள் சொல்கிருன். ஊறுகாய் வியாபாரி அவன் பின்னுலேயே பிரவேசிக்கிருர்.)

வியாபாரி: ஊறுகாய் வேணுமா ஸார் ஊறுகாய்? ஆவக்காய், அரநெல்லி, எலுமிச்சை, கொழுமிச்சை, மாவடு, மாகாணி.

டி. கலெ: இங்கொண்ணும் வேண்டாமப்பா.

வியாபாரி: அன்டச்டு பை ஹாண்ட் (Untouched by hand) ஸார்! கையிலே தொடாம, செய்தது. ரொம்ப டேஸ்ட்டா இருக்கும் ஸார்! எங்க பி. வி. எஸ். ஊறுகாய்க்கு அட்வர்டைஸ்மெண்டே தேவையில்லே ஸார்! ஒரு தரம் வாங்கிட்டீங்கன்னு, அப்புறம் வாங்காமே இருக்கமுடியாது ஸார்! பாருங்க ஸார். இந்த எண்ணெய்க்காய், எலுமிச்சங்காயை! பாட்டிலைப் பாக்கும் பொழுதே நாக்கிலே தண்ணிசொட்டுதில்லையா ஸார்? கார்க் எடுக்காமலேயே பாட்டிலே காலி செய்யணும்னு தோணுதில்லையா ஸார்? விலை ஒண்ணும் அதிகமில்லே ஸார்! பாட்டில் ஒண்ணுக்கு ரூ ஒண்ணரை தான். ஒண்லி ஒண் எயிட். எங்க ஊறுகாய்க்கு இணை எதுவுமே கிடையாது ஸார்! பி.வி.எஸ் ஸோ கொக்கோன்னுனும்.

டி. கலெ: ஓகோ! கொக்கைக்கூட ஊறுகாய் போடுவீங்களா?

வியாபாரி: ஸார்! 'புத்தர் பிரியாணி பவன்'னு சொல்லி, போர்டு போடறுங்களே, அப்படியில்லே ஸார் நாங்க! எங்க பிரிபரேஷன் எல்லாம் ப்யூர் வெஜிடபிள் 'ஸ்டப்' ஸார்.

ஹைகோர்ட் ஜட்ஜஸ் ஏகதேசம் எங்க ஊறுகாயைத் தான் சாப்பிடறுங்க. ஏறக்குறைய எல்லா ஸினிமா ஸ்டார்ஸும் எங்க ஊறுகாயைத்தான் விரும்பு கிறுர்கள்.

டி. கலெ: ஓஹோ! அப்படின்னு அவங்களே சாப்பிடட்டும். எனக்குத் தேவையில்லே.

வியாபாரி: நீங்க அப்படியெல்லாம் சொல்லக்கூடாது. எ ட்ரயல் காஸ்ட்ஸ் நத்திங் ஸார்! (A trial costs nothing Sir!)

டி. கலெ: நத்திங்கா? அப்படின்னு சும்மா கொடுத்துட்டுப் போறயா?

வியாபாரி: அதுக்கென்ன ஸார், கொடுத்தாப் போச்சு. பணமா பெரிசு. பாருங்கோ, டிலீப் சுந்தரி டோரியா பாய் இருக்காளே, அவகூட இப்படித்தான் கேட்டா. சரின்னு ஒரு பாட்டில் ஸாம்பிள் கொடுத்தேன். இப்போ பாருங்கோ, டஜன் கணக்கா ஆர்டர் கொடுக் கரு. பாருங்க ஸார். அந்த கெட்அப், அந்த ஸ்பைஸி, ஜ்யூஸி கண்டென்ட்ஸ் (நாக்கைச் சப்பிட்டு) அந்த கலருக்கே கொடுக்கலாம் ஸார். இது மாங்காய் ஊறு காய். இந்த மாங்காய்லே முப்பது விதம் உண்டு ஸார்.

டி. கலெ: அதுலே எது சாப்பிட்டாலும் வயித்துக் கடுப்பு வந்துடுமோ?

வியாபாரி: ஐயா கொஞ்சம் ஹாஸ்யப் பேர்வழி போலிருக்கு. ஸார்! ஹாஸ்ய நடிகர் அல்டாப் ரங்கன்கூட எங்க ஊறுகாய்க்கு இணை இல்லை என்கிறுர் ஸார்.

கலெ: மிஸ்டர்! வில் யு ப்ளீஸ் கெட் அவுட் (Mr. will you please get out.)

வியாபாரி: Apart from ஊறுகாய், ஐ ரெப்ரெஸென்ட் அப்ப ளாம்ஸ் ஆல்ஸோ ஸார். (I represent Appalams

also Sir) பாருங்கோ ஸார். இந்த மொறு மொறுப்பு, அந்த இன்வைட்டிங் ஷேப் (inviting shape)! ஒவ்வொரு சமையல் கட்டிலேயும் இருக்கவேண்டிய ஒரு முக்யமான அயிட்டம் ஸார். விலை ஒண்ணும் அதிகமில்லை ஸார். நூறு கொண்ட கட்டு ஒண்ணுக்கு அணு 12 தான். ஒன்லி ட்வெல்வ் அணுஸ் (Only twelve Annas) பாருங்கோ ஸார். பார் இன்ஸ்டன்ஸ், (For instance) திடீருன்னு வீட்டுக்கு விருந்தாளி வரா. மார்க்கெட்டுக்குப் போக டைம் இல்லை. சமையற்காரன் முழிக்கிருன். தேர் கம்ஸ் டு யுவர் ஹெல்ப், அவர் பேமஸ் (There comes to your help our famous) ஊறுகாய் அண்ட் க்ளோரியஸ் (& glorious) அப்பளாம்ஸ் (Appalams). போடுவானலியை,பொறிச்செடு அப்பாளத்தை! இருக்கவே இருக்கு, ஸ்வீட் பிக்கில்ஸ் (Sweet pickles) தித்திப்பு ஊறுகாய், ஹாட் பிக்கில்ஸ் (Hot Pickles) காரமான ஊறுகாய், இருக்கவே இருக்கு எங்க சட்னி பவுடர். வேறென்ன ஸார் வேணும் விருந்தாளிக்கு? இலையைப் போடவேண்டியதுதான். வயிறு புடைக்க சாப்பிடுவார். ப்...ஏ...வ் (ஏப்பம்) பஸ்ட் கிளாஸ் ஒரு ஏப்பம். உங்களை வாழ்த்திண்டே போவார்.

டி. கலெ: உங்களுக்குப் பணம் சேர்ந்துண்டே போகும். உம்... சரி, சரி, ஒரு பாட்டில் ஊறுகாயை கொடுத்துட்டுப்போ.

வியாபாரி: ஸார், ஒரு கட்டு அப்பளாத்தையும் வாங்கிப் போடுங்கோஸார்! பணத்தைப் பார்க்காதிங்க ஸார்.

டி. கலெ: உன் கிட்ட கொடுத்தப்பறம் பணத்தை எங்கே பாக்கறது?

வியாபாரி: தாங்க்ஸ்! நான் வரேன் ஸார்.

(போகிருன். அந்த சமயம், வாசலில் ஏதோ கலவரம் நடப்பது போன்ற சப்தம் கேட்க,

மாதவராவ் சற்று நிதானிக்கிறார். அடுத்த நிமிடம் மாதவராவின் வேலைக்காரனை சுப்பனுடன் சண்டையிட்டுக் கொண்டு, அவனையும் தள்ளிய வண்ணம் உள்ளே வருகிறான் முரளி)

சுப்பன் ; எசமான் ! இந்தப் பயல் நான் எவ்வளவு தள்ளியும் கேட்காமே உள்ளே வந்துட்டானுங்க.

(மாதவ ராவ் முரளியை முழித்துப் பார்க்கிறார். தாடி மீசையுடனும், கிழிந்த ஆடையுடனும் நின்ற முரளி, கண்டோர் மனம் கரையும்படி தன் மாமனாரைப் பார்க்கிறான். சுப்பன் தூர நிற்கிறான்)

மாதவ : யாரடா நீ பிச்சைக்காரப் பயலே? தெரு போகும் வழி தெரியவில்லையா உனக்கு ? என் வீட்டிற்குள்ளே உனக்கு என்னடா வேலை ?

முரளி : மாமா ! என்னைத் தெரியவில்லையா உமக்கு ? உங்களது கேள்விகள் என்னைத் திடுக்கிடும்படி செய்கின்றனவே ! அவை ஏற்கெனவே புண்பட்ட என் திரேகத்தில் கூரிய அம்புகள் போல் பாய்ந்து, என்னைப் புழுவெனத் துடிக்கச் செய்கின்றனவே, மாமா !

மாதவ : ஹ ! ஹ ! (சிரித்துக்கொண்டு) பேஷ். இது என்ன நவீன பிக்ஷையா ? ஏண்டா, பரதேசிப் பயலே ! என்னை மாமாவென்று என்ன தைரியத்துடனடா அழைக்கிறாய் ? அடே சுப்பா, கொடுடா இவனுக்கு பட்டணம் கல்தா ஒன்று.

(சுப்பன் நெருங்க வருகிறான். உடனே முரளி வெறி கொண்டவன் போல் சுப்பனை முழித்துப் பார்த்துவிட்டு)

முரளி : அடே ! என்னைத் தொட்டால் எனக்கிருக்கும் ஆத்திரத்தில் உன்னைக் கிழித்தெறிந்து விடுவேன் தெரியுமா ? ஏன் ஐயா, என்னை யாரென்று தெரியவில்லை

உமக்கு? கடவுள் கொடுத்த கண்களிரண்டும் இவ்வளவு சிக்கிரத்திலா சூட்சுமத்தை இழந்து விட்டன? நான்தானய்யா உம்முடைய மாப்பிள்ளே! உம்முடைய பெண்ணின் அகமுடையான்! உம்முடைய மகளுக்குத் தாலி கட்டிய கணவன்! தெரிந்ததா?

மாதவ: (நாலா பக்கமும் பார்த்துக்கொண்டு) ஓஹோ, மாப்பிள்ளே துரைவாளா? தெரிஞ்சுதே...! அடே முரளி! இந்தப் பிச்சைக்காரக் கோலத்தில் என்னே அவமானப்படுத்த வேண்டுமென்று நினைக்கிருய்? மரியாதையாகப் போய்விடு.

முரளி: என்ன ஐயா சொன்னீர்? நான் சமூகத்துக்கெதிரில் இப்பொழுது பிச்சைக்காரப் பயல்தான். நான் இப்பொழுது உம்மைக் கேட்கும் பிச்சையும் ஒன்றே. அப்பிச்சை என்னவென்ருல், எனது மனேவியான சரசாவை என்னுடன் அனுப்ப வேண்டுமென்பதே. இந்தப் பிச்சையைக் கொடுத்துவிட்டால் எனது தொழிலேப் பார்த்துக்கொண்டு போகிறேன். வேறு உம்மிடம் எவ்விதமான தயவையும் எதிர்பார்த்து நான் இங்கே வரவில்லே.

மாதவ: போறுமே, நீ உன் மனேவியை வைத்துக்கொண்டு சம்ரக்ஷித்த அழகு! வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போ. போ சீக்கிரம். யாராவது இங்கே வந்துவிடப் போகிருர்கள்.

முரளி: வரட்டுமே.

மாதவ: அட அயோக்கியப் பயலே! நான் யார் என்பது தெரியாதா உனக்கு?

முரளி: தெரியும், பகல் வேஷ...

மாதவ: சீ இடியட்! என்ன சொன்னுய்? இந்த ஊரில் என்னேச் சிறு குழந்தைகள்கூட அறியுமே. ரிடையர்ட் டெபுடி கலெக்டர் மாதவ ராவ், ஸ்திரி சமூக உத்

தாரணகர்த்தா, தர்மப் பிரபு, தயாள குணசீலர், உதாரி என்றெல்லாம் பிரசித்தி பெற்ற என்னைப் பார்த்து, வாய்த்துடுக்காக என்ன வார்த்தை சொன்னாய் ? போதும். மரியாதையாகப் பிழைப்பதற்கு ஒரு வழி சொல்கிறேன். அதன்படி செய்வதானால் செய். இல்லாவிட்டால் அவமானமடைந்து ஓட நேரிடும். என்ன தெரிந்ததா ?

(முரளி மௌனமாக நிற்கிறான்)

முரளி, பதில் சொல்லமாட்டாயா ? சரி, என் யோசனையைக் கேள் சொல்கிறேன். உனக்கு ஒரு "ஆயிர ரூபாய்க்கு செக்" எழுதிக் கொடுக்கிறேன். அதை எடுத்துக்கொண்டு மரியாதையாக எங்கேயாவது கண் காணா தேசத்திற்கு ஓடிவிடவேண்டும். எங்கேயும் என்னுடைய பெயரை உன் பெயருடன் சம்பந்தப் படுத்தலாகாது. அம்மாதிரி செய்ய இஷ்டந்தானா என்ன ? (முரளி மீண்டும் மௌனம்) என்ன, "பதிலே காணோம்". சரி.

(முரளி கண்களில் நீர் ததும்ப மாதவராவைப் பார்த்துக்கொண்டே நிற்கிறான். அவனுக்குத் துக்கம் பொங்கி எழுகிறது. மாதவராவ் செக்கை எழுதிக் கிழித்துக்கொண்டு)

முரளி ! இதோ இதை எடுத்துக்கொள். எடுத்துக் கொண்டு இந்தத் திசைகூடத் திரும்பிப் பாராது, விடு சவாரி ! உம்... !

(முரளி கையில் செக்கைத் திணிக்கிறார்)

முரளி : (ஆத்திரத்தோடு அந்தச் செக்கை வாங்கிச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துக்கொண்டு)

அடே சுயநலப் புலியே ! சீ, உனது பிக்ஷை வேண்டாமடா எனக்கு. இதோ பிடி. (மாதவராவின் மீது கிழிந்த செக் தூள் கடுதாசிகளை விட்டெறிகிறான்)

அடே! ஏதோ இது சமயத்தில் விதியின் பயனாக நான் பிக்ஷாண்டியாகத் திரிகிறேன். நீ ஏதோ சமூகத்தின் உச்சியில் இருப்பதாக எண்ணி மனப்பால் குடிக்காதே. முடி சார்ந்த மன்னரும் ஒரு பிடி சாம்பராவர் என்பதை மறந்துவிடாதே. உள்ளுக்குள்ளே எல்லாம் சுயநல ரத்தம் ஓட, வெளிப்பகட்டிற்கு மட்டும் சமூகத்திற்குப் பாடுபடுவதாக ஜாலம் செய்யும் பதரே! நான் உன் மாப்பிள்ளை என்ற உண்மையை ஊராருக்கு அறிவிக்கக்கூடாதென்று பயந்து நடுங்கும் சூரப் புலியே! பட்டங்களுக்கும், பதவிகளுக்கும், வீண் பெருமைக்காகவும் இந்த வேஷங்கள் போடுகிறாய் நீ என்பதை உலகமறியும். உன் மாதிரியான கல் நெஞ்சப் பிராணிகள் மனித சமூகத்திற்கே ஒரு களங்கமென இருக்கின்றனர். உன் போன்றவர்கள் சமூகத்தில் கலந்து சுற்றிவருவதால்தான், தயை, ஈகை, மனுஷத்வம் என்னும் மூன்றும் இருக்குமிடம் தெரியாது ஓடிப் போய், அவற்றிற்குப் பதிலாக நிர்த்தயை, ஈகையின்மை, பைசாசத்வம் எனும் மூன்றும் தலைவிரித்தாடுகின்றன. உனது கைப் பிக்ஷையை நாடி நான் வரவில்லை என்பதை இன்னொரு முறை அறிந்து கொள். என் வயிற்றுப் பிழைப்பைப் பற்றி கிஞ்சித்தும் நான் கருதவில்லை. தெருவில் ஓடும் நாய்கூட வயிற்றுப் பாட்டைப் பற்றிக் கவலை கொள்வதில்லை. என் சொந்த மனைவியை என்னுடன் அனுப்பு என்று கேட்கிறேன். எனக்குள்ள சுகதுக்கங்களில் பங்கெடுத்துக்கொள்ள விரும்புவாள் என் மனைவி.

மாதவ: (பெருமூச்சுவிட்டு, சுப்பனைப் பார்த்துக் கோபத்துடன்) சீ, ராஸ்கல். இங்கே ஏண்டா தடிபோல நின்றுகொண்டிருக்கிறாய். போடா காமாட்டிப் பயலே வெளியே. கூப்பிட்டால் வாயேன்.

முரளி : ஐயோ ! சரஸா ! எங்கிருக்கிருய் நீ ! நான் கதறுவது உன் செவிகளில் விழவில்லையா ? சரஸா ! சரஸா ! (என்று கூவிக்கொண்டு அங்குமிங்கும் வீட்டினுட் புறம் நகர்ந்து பார்க்கிருன். சரஸா, 'நாதா !' என்று ஓடி வருகிருள். முரளியும் ஆவலோடு, 'சரஸா !' என்று அழைத்துக்கொண்டு அவளை அணுகப் போகிருன். சந்துருவும் 'அப்பா !' என்று ஓடி வருகிருன். சரஸாவின் கையைப் பிடித்து இழுத்து நிறுத்திய மாதவராவ், 'ஏ சரஸா ! போ உள்ளே ! சந்துரு வா இப்படி ! அடே சுப்பா தள்ளுடா அவனை !' என்று கத்துகிருர். சுப்பன் ஓடி வந்து முரளியைத் தள்ளுகிருன்.)

(திரை விழுகிறது).

## காட்சி 25.

### இடம் : தெரு

பாத்திரங்கள் : நாட்டி, முகுந்த்

நாட்டி : ஏண்டா, முகுந்த் ! அந்த வில்லைப் பற்றி கவனிச்சியா ?

முகுந் : நீ நல்ல நாட்டி. அவளைக் கேட்டேண்டா. கொடுக்க மாட்டேங்கரு ?

நாட்டி : நீ வந்துட்டியோ ?

முகுந் : பின்னே என்ன செய்யறது ?

நாட்டி : இப்போ போ. போ இப்போ.

முகுந் : போய்...

நாட்டி : கேளு.

முகுந் : கொடுக்கமாட்டேன்னு ?

நாட்டி : ஒன்ஸ், ட்வைஸ், த்ரைஸ். மூணுதரம் கேளு.

முகுந் : அப்புறம் ?

நாட்டி : இந்தா எடு இதை. (ரிவால்வரைக் காட்டி) சுடு அவளை.

முகுந் : என்னடா இது ?

நாட்டி : ரிவால்வர்.

முகுந் : இதை எப்படி சுட்றது ?

நாட்டி : இதோ பார். (லீவரைக் காட்டி) இதை அப்படித் தட்டிவிட்டால் அதுவே சுட்டுவிடும்.

முகுந் : எதோ ?

நாட்டி : (ஒரு தோட்டாவைச் சுட, முகுந்தன் பயந்து தொப் பென்று கீழே விழுகிருன்) என்னடா முகுந்த் ? எழுந்திருடா !

முகுந் : (நடுங்கிக்கொண்டு) ஐய்யய்யோ...என்னுலே முடி யாது !

நாட்டி : என்னடா இப்படி பயப்படறயே ?

முகுந் : ஐயோ, அப்பா ! என் கொடலெல்லாம் நடுங்கறதே ! என்னுலே முடியவே முடியாது.

நாட்டி : சீ எழுந்திரு. (எழுப்பி நிற்கவைத்து) உயில் கிடைக் கிற விதத்தைச் சொல்லி, நாளைக்கு உன் கைக்கு உயில் வந்தா, எனக்கா கொடுக்கப்போறே ?

முகுந்த் : இல்லே.

நாட்டி : பின்னே என்ன ? நீ கேளு. அவ கொடுக்கலேன்னு, இந்த மாதிரி அவளைச் சுடு.

முகுந் : அப்பா, எனக்கு இப்போ இருக்கிற பயம் தெளியரத் துக்கு மூணு நாளாகும். அதுக்குப் பின்னுலே, சமயம் பார்த்து வேலையை முடிக்கிறேன்.

நாட்டி : அடே முகுந்த் ! இந்த மாதிரி வேலைகளைச் செய்யற போது டைனமெட் கெட்டிச்சாப்போலே இருக்க ணும்டா. சரி, இதிலே 6 தோட்டாக்கள் கெட்டிச் சிருக்கு. இந்தா. (கொடுக்கிருன்)

முகுந் : டைனமெட் கெட்டிச்சாப்பலேதானே ? (மாரில் தட்டிக் கொண்டு) சரிடா அப்பா. இதைப் பார்த்தாலே பயமாயிருக்கு. இப்படியே பின் பக்கமாகவே கொண்டுபோகட்டுமா ?

நாட்டி : எப்படியாவது தொலைஞ்சு போ. அகப்பட்டுக் கொள்ளாதே.

(திரை விழுகிறது)

## காட்சி 26.

**இடம் : மாதவராவ் வீட்டில் ஒரு அறை. அதிலே அம்பிகையின் முன் சரசா பாடிக் கொண்டிருக்கிருள்.**

சரசா பைரவி—ஆதி

நீதயை புரிவாயே—உன்பாதம்
மறவேன் தாயே—அம்பா (நீ)
மேதினியில் ஒருபேதை அனுதை—எனக்
காதாரம் வேறேது—ஜெகன்மாதா (நீ)
மாயா உலகில் நானொருவிளையாட்டு பொம்மை
நீயே எனை அணைத்துதாலாட்டும்—அம்மை
வாயாலெந் நேரமும் உன்புகழ்பாடி
மனமுனது மலரடிநினைந் திடவும் (நீ)

சரசா : தேவி, சம்சார பந்தத்தில் சிக்கிய என்னையும் எனது கணவரையும் குழந்தையையும் இத்தனை காலம் நீ சோதனை செய்ததெல்லாம் போதும். எங்கள் வாழ்க்கையில் இதுவரை வீசி வந்த வறுமைப் புயல் தணிந்து, மந்த மாருதத்தை வீசச் செய்வாய், தயாபரி. தகுந்த யோக்யதை உள்ள என் நாதருக்கு நல்லதொரு உத்யோகம் கிடைக்கும்படி செய்து, இவ்வுலகில் அவரும் தலை நிமிர்ந்து நடக்கும்படி செய்வாய், ஜகதீஸ்வரி !

(திரை விழுகிறது.)

**காட்சி : 27.**

## இடம் : ஜமீந்தார் வீட்டுக்கு வெளியே.

பாத்திரங்கள் :—முரளி, பத்மா.

(முரளி பிரவேசிக்கிறுன். நல்ல உடைகள் அணிந்து, தாடி மீசை இல்லாதிருக்கிறுன்)

முரளி : ஒரு மட்டிலும் ஈஸ்வரன் கண் திறந்து பார்த்துவிட்டான். என் கஷ்டங்களுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைக்கும்படியான காலம் வந்து விட்டது. என் குடும்பத்தை அறிந்த ஒரு பெரியவர் என் நிலையைப் பார்த்து, பரிதாபப்பட்டு, பிர்க்கா அபிவிருத்தி திட்டத்திலே எனக்கு ஒரு நல்ல வேலை வாங்கிக் கொடுத்து விட்டார். இந்த உத்தியோகத்தை ஏற்கப்போவதற்கு முன், இந்தச் சந்தோஷச் செய்தியை என்மீது அத்யந்த அன்புகொண்ட பத்மாவையும், தாத்தாவையும், தம்பி முகுந்தனையும் பார்த்து சொல்லிப் போக வேண்டுமென்ற ஆசை எழுந்தது. இப்பொழுதுள்ள புதுக் கோலத்தில் பத்மா என்னைப் பார்த்தால் எவ்வளவு சந்தோஷப்படுவாள். சந்தோஷப்படட்டும் நன்ருக.

(புறப்படுகிறுன். எதிரே பத்மா வருகிருள். முரளியைக் கண்டதும் திகைத்து நின்று.)

பத்மா : நான் காண்பது கனவா, நனவா? (கண்களைக் கசக்கிக் கொள்கிருள்)

முரளி : பத்மா, கனவல்ல. நனவே! கண்ணைக் கசக்கிய பின்னும் இங்கு நானேதான் தோன்றுவேன். அதிலென்ன சந்தேகம்?

பத்மா : அன்பரே, தாங்கள் எப்பொழுது வந்தீர்கள்? எங்கிருக்கிறீர்கள்? தங்களைக் கண்டுபிடித்து அழைத்து வரவே வேணுவைத் தேடி அலைகிறேன்.

முரளி : ஏன், வேணு இப்பொழுது நம் வீட்டிலில்லையா?

பத்மா : இல்லை...தாத்தா இறந்ததும்...

முரளி : என்ன ? என்ன சொன்னாய் ? தாத்தா இறந்து போய்விட்டாரா ? ஐயோ! பெரும்பாவி நான். நான் அவதிப்படும்பொழுதெல்லாம் வாழ்ந்திருந்து, நான் சம்பாதிக்கும் நிலைமையை அடைந்திருக்கையில், ஐயோ தாத்தா, அதைக் கண்டு களிக்க இயலாது மறைந்துவிட்டீரே! கடவுளே கதி என்று ஒரு குடிசையில் நூல் நூற்றுக்கொண்டிருந்த எனக்கு, கடவுள் கண் திறந்து, காதிப் பிரசார வேலையைக் கொடுத்திருக்கிறார் பத்மா. தாத்தா போன பிறகு வீட்டு நிலைமையும்...

பத்மா : ஆமாம். அலங்கோலமாகிவிட்டது. உங்கள் தம்பியின் பாடு குஷியாகிவிட்டது. வேணு வேலையை விட்டுவிட்டுப் போய்விட்டான். என்னுடைய அப்பா, சொல்லவும் வெட்கமாகயிருக்கிறது. அவரது பேராசையும், குணமும் ரொம்பக் கேவலமாக இருக்கின்றன. ராதா கெட்டழிந்து குட்டிச்சுவராகிவிட்டாள். முள்மேல் நின்று காலத்தைக் கழிப்பது போலிருக்கிறது எனது வாழ் நாள். உங்கள் தம்பி நாட்டியின் துர்ப்போதனைப்படி ஆடி வருகிறார். தாத்தா சாகு முன் என் பெயருக்கு எழுதிவைத்திருந்த உயிலை என்னிடமிருந்து அபகரிக்க இப்பொழுது சூழ்ச்சிகள் நடந்து வருகின்றன. என்ன செய்வது ? உயில் அவர் கையில் அகப்பட்டால் சொத்தெல்லாம் தூசியாகப் பறந்துவிடுமே என்று நடுங்கிக் கொண்டிருக்கிறேன். நல்ல காலமாக நீங்கள் வந்தீர்கள்.

முரளி : நான் வந்து என்ன பலன் ?

பத்மா : இன்று பிற்பகல் நான்கு மணி சுமாருக்கு பங்களாவிற்கு வாருங்கள். அப்பொழுது...

முரளி : பத்மா! வேண்டாம் இக்காரியம். வீணாக முகுந்தனுக்கு என்மேல் ஆத்திரமேற்படும். அதை நான்

விரும்பவில்லை. எனக்கு வேலை கிடைத்துவிட்டது. திருநெல்வேலிக்குப் போகிறேன் எனும் செய்தியைச் சொல்லிப் போகவந்தேன். வீட்டின் தற்கால நிலைமை இப்படி இருப்பதால் நான் யாரையும் பார்க்க விரும்ப வில்லை. நீ சொல்கிறபடியும்...

பத்மா: தாங்கள் தடைசெய்யக்கூடாது. இந்த ஒரு வேண்டு கோளை மட்டும் மறுக்கக்கூடாது. இன்று பிற்பகலில் வீட்டில் யாரும் இருக்கமாட்டார்கள். தாங்கள் அவசியம் வரவேண்டும். தங்களிடம் தாத்தா எழுதிக் கொடுத்த உயிலைக் கொடுத்துவிடுகிறேன். அதற்கப்புறம் அத்துஷ்டர்கள் கையில் எனக்கு எவ்வளவு ஹிம்சைகள் நேரிட்டபோதிலும்...

முரளி: பத்மா...என்ன காரியம் செய்யத் தீர்மானித்திருக்கிருய்?

பத்மா: ஐயோ! தாத்தாவின் பெயர் கெட்டழிந்து, உங்கள் தம்பியும் நானும் நடுத் தெருவில் நிற்கவேண்டுமென்பது உங்கள் விருப்பமா?

முரளி: இல்லையம்மா.

பத்மா: அப்படியாஞல் உயில் உங்கள் கையில் சேரவேண்டியதும் அவசியமே. கட்டாயம் நீங்கள் வந்துதாஞக வேண்டும்.

முரளி: (சற்று நிதானித்து) சரி, மாலை 4 மணிக்குத்தானே? சரி வருகிறேன். போய் வரட்டுமா?

(பத்மா கண்களில் நீர் ததும்ப, பேசாது நிற்கிருள். முரளி போகிருன்)

பத்மா: (அவன் போன திசையைச் சற்று நேரம் பார்த்து) மனமே நீயே வெற்றிபெற்ருய். இந்தப் பாபிகள் எண்ணம் ஈடேறக்கூடாதென்பது பகவானது இஷ்டம்போலிருக்கிறது. இன்று மாலை 4 மணிக்கு எனது அன்பரை மற்ருெருமுறை காணும் பாக்யமிருக்கிறது.

(போகிருள்)

*காட்சி : 28.*

## இடம்: ஜமீந்தார் வீடு

**பாத்திரங்கள்:** பத்மா, முரளி, முகுந்த், கனபாடிகள், ஜமீந்தார்.

(பத்மா தனியாக உலாவிக் கொண்டிருக்கிருள்)

பத்மா: ஐயையோ! இதென்ன ஒரு நாளுமில்லாது இன்று என் மனம் பதறுகிறதே. அபசகுனக் குறிகள் தோன்றுகின்றனவே! என்ன விபரீதம் நேருமோ தெரியவில்லையே.

**பத்மா மிஸ்ரம்—திஸ்ரம்**

(தொகையரு)

மணமேடை பலிபீடமாச்சே
மணவாழ்க்கை விஷமாகிப் போச்சே
வாழ்வும் வீணுச்சே,
என் மனமே துயராலே—என்னுளும்
நலிந்தே வாடிடுதே—துயரால்
நலிந்தே வாடிடுதே (என்)

தணல் மேலபடும் ஒருபுழுவினைப் போல்நான்
தவித்தே வாடுறேன்—என்றும்
தவித்தே வாடுறேன்
மணமே இல்லா வீண்மலருமாக
மண்மேல் தோன்றினேனே—நான்
மண்மேல் தோன்றினேனே (என்)

சூழும் நிலையில் நானும் கூண்டிற்
கிளிபோல் வீணிலே—மனம்
குழைந்தே ஏங்குறேன்
உலவும் நீலவானின் மதிபோல்
வாழ்வும் தேய்ந்ததே—என்
வாழ்வும் தேய்ந்ததே (என்)

(திடீரென்று முகுந்தன் குடி வெறியுடன் தோன்றுகிருன்)

முகுந் : அடி பத்மா. என்னடி மாசக் கணக்கிலே உயிலைக் கொடுக்காமே சக்கர் கொடுத்துக்கொண்டிருக்கேயடி அம்மா. இதோ பார். இன்னிக்கு என் கையிலே உயில் கட்டாயம் வந்துடணும். இல்லாட்டா...

பத்மா : (முடுக்காக) என்னிடம் உயில் இல்லை.

முகுந் : என்ன, உயில் இல்லியா ? எங்கே போச்சு அது ?

பத்மா : எனக்குத் தெரியாது.

முகுந் : கொடுக்கிறியா இல்லியா உயிலை ?

பத்மா : என்னைத் தொந்தரவு செய்வதனுல் பலனில்லை.

முகுந் : ஏண்டி அம்மா ?

பத்மா : என்னைக் கேட்பதும், ஒரு கல் கம்பத்தைக் கேட்பதும் ஒன்றுதான்,

முகுந் : அடி பத்மா ! உனக்கு இவ்வளவு திமிரா ? இதோ பார். (தனக்குள்) அடடா, நாட்டி என்ன சொல்லச் சொன்னுன் ? நினைவிற்கு வரமாட்டேன்கிறதே. (கையை உதறுகிருன். தலையைச் சொறிகிருன், ஆ! வந்தது நினைவிற்கு. நாட்டிஸ் டைனமைட் (மார்பை தட்டிக்கொண்டு, தடுமாறிய வண்ணம் கனைத்து) பத்மா, உயில் எங்கே ?

பத்மா : என்னிடம் இல்லை.

முகுந் : உயில் எங்கே பத்மா ? உயில் எங்கே ? உயில் எங்கே ? மூன்று தடவையாச்சு.

பத்மா : (பதில் சொல்லாது முகத்தைத் திருப்பிக் கொள்ள)

முகுந் ; பதில் பேசமாட்டாயா? இதோ பார். (தன் இடுப்பிலிருந்து ரிவால்வரை எடுத்து) நான் இப்பொழுது பழைய முகுந்தன் இல்லை. உயிலைக் கொடு. ஒன்ஸ், ட்வைஸ், த்ரைஸ். உம்...கொடுக்கப்போகிருயா இல்லையா ? கொடுக்கமாட்டே? நாட்டி சொல்லிக் கொடுத்திருக்கிருன் பிளான், அதன் படி சுட்டே விடுவேன்.

பத்மா : (தைரியமாக) பேஷாகச் சுட்டுவிடுங்கள். உங்கள் மத்தியில் இருந்துகொண்டு மனம் நோக வாழ்வதை விட இறப்பதே மேல். சந்தோஷமாகச் சுடலாம்.

முகுந் : (சற்று நேரம் அவளை விரைத்துப் பார்த்துவிட்டு, கொஞ்சும் குரலில்) வேண்டாண்டி, என் கண்ணே! கொடுத்துடடி உயிலே! கொடுத்துடுன்னு கொடுத்துடு. இல்லாட்டா நான் சுட்டுடுவேன். நான் சுட்டால் நீ செத்துப் போய்டுவேடியம்மா. வேண்டாண்டி அது. கொடுத்துடு உயிலே.

பத்மா : போதும். உங்களது கொஞ்சல். உயிலுமில்லே, குயிலுமில்லே.

முகுந் : (கோபத்துடன்) தரமாட்டே? தொலே பொணமே. (சுட) பத்மா 'ஐயோ! அப்பா!' என்று கீழே விழுகிருள். மறுபக்கத்திலிருந்து கனபாடிகள் வர, 'நீயும் தொலேடா கனபாடிக் கழுதை' என்று கூறி கனபாடிகளேயும் சுட, அவரும் கீழே விழுகிருர். முகுந்தன் அவரைப் பார்த்துக் கொண்டிருக்கும் சமயம், முரளி ஓடி வந்து முகுந்தன் கையிலிருக்கும் துப்பாக்கியைப் பிடுங்க, 'ஐய்யய்யோ! கொலே, கொலே' என்று கத்துகிருன். ராதா ஓடி வந்து பத்மா மீது விழுந்தழுகிருள். கூட்டம் கூடுகிறது. போலீஸார் முரளியைக் கைது செய்கின்றனர்.

முரளி : ஐயோ! விதி! விதி! எங்கே சென்ருலும் என் நிழல் கூடவே வருகிறது. கடவுளே!

(போகிருர்கள்)

(திரை விழுகிறது).

காட்சி 29.

## இடம் : தெரு

பாத்திரங்கள் : முருந்தன், நாட்டி

(முகுந்தன் திகிலடைந்து தனியே நின்றுகொண்டிருக்கிருன்)

முகுந் : அப்பா ! எல்லாம் ஒரு நொடியிலே கனவு போல் நடந்து தீர்ந்து போய்விட்டதே. (நாலாபுறமும் பார்த்து) அது போகட்டும். சுட்டது நான், அகப் பட்டது முரளி. அவன், பாவம், விதி விதின்னுன். அதைக் கேட்டு போலீஸ்காரன், 'விதியைப் பாருடா. பட்டப் பகலிலே இரண்டு கொலே செய்துவிட்டு விதி யாம்னு' சொல்லி விலங்கு போட்டு இழுத்துக் கொண்டு போயிட்டான். ஐயோ! முரளி நிரபராதி யாச்சே. அவன் என்னுடை அண்ணன்தானே ! அவனைக் கொலைக் குற்றத்துக்காக தூக்கிலே போட்டு டுவாளே. அப்போ, அவன் செத்துப் போயிடுவானே. எனக்கு அப்புறம் அண்ணு இல்லாமல் போயிடுமே. (கண்ணைக் கசக்கி) சீ ! இப்பவே போலீஸ்காரரிடம் போய் முரளி ஒண்ணும் செய்யலே ; கொலே செய்த வன் நான்தான் என்று சொல்லிடட்டுமா? (இரண்டடி நடந்தபின்)

டேய் முகுந்த் ! (திகைத்து நின்று) போலீசு கிட்டயா சொல்லப் போறே? சொல்லு. சொல்லு. சொன்ன, என்ன ஆகும் தெரியுமா? உன் கழுத்துக்கு தூக்கு வரும். அப்போ தித்திப்பா இருக்குமா? ஏண்டாப்பா சாகணும்? உன் உயிர் யார் அப்பன் வீட்டுச் சொத் தாம், இப்படி தூக்கிலே தொங்கிட? உம்...! என்ன செய்யறது ? என்ன நடக்கும்? முரளியை கோர்ட் டிலே விசாரிப்பா. அங்கே இந்த பத்மாவோட பிசாசும், கனபாடி பிசாசும் வந்து சாட்சி சொல்

விட்டா...அந்தப் பிசாசுகள்...(அவன் தோளை நாட்டி தொட, முகுந்த் அலறி அடித்துக்கொண்டு உளறிய வண்ணம் திரும்புகிருன்.)

நாட்டி: அடே முகுந்த்...என்னடா தனியே நின்றுகொண்டு உளறிண்டு இருக்கே ?

முகுந்: ஒன்றுமில்லையப்பா ! போன சிவராத்திரிக்கு மதுரைக்குப் போயிருந்தேனு ? அப்போ மீனுக்ஷி கோவிலிலே பிசாசுகள் ஆடித்து. ஒரு பிசாசு, வாங்கிபாத் கொண்டான்னு கேட்டது...

நாட்டி: சட், ராஸ்கல்! எங்கிட்டேயா காது குத்தறே? உண்மையைச் சொல்.

முகுந்: உண்மை வேறென்னடாப்பா ?

நாட்டி: நான் சொல்லட்டுமா? நீ தப்பித்துக்கொண்டு தனியாக இங்கே வந்து என்ன செய்வதென்று யோசித்துக்கொண்டிருக்கிருய். இல்லையாடா ? சொல்லு.

முகுந்: (கொட்டக் கொட்ட முழிக்கிருன்).

நாட்டி: (முந்தன் சட்டையைக் கழுத்தண்டை நெருக்கிப் பிடித்த வண்ணம்) கொலைகளைச் செய்தது நீதானே ? சொல்லுடா! உம்... சொல்லு. நீ தானே கொலை செய்தவன் ? (முகுந்தன் தன்னையும் அறியாது தலை ஆட்டுகிருன்) நீ தானே ? (ஆமாம் என்று சொல்வது போல் முகுந்தன் இரு முறை நன்ருகத் தலையை ஆட்டுகிருன்) அப்படிச் சொல்லு. நம்ப கிட்டே உன் ஜம்பம் நடக்குமா அப்பா ?

முகுந்: நாட்டி ! நீ என் சினேகிதன் அல்லவா ? அதனுலே...

நாட்டி: அதிருக்கட்டும். இப்போ நீ என்ன செய்யப் போறே ?

முகுந்: நீதான் சொல்லேண்டாப்பா.

நாட்டி: ஏனோ ?

முகுந் : நாட்டி. உன்னே நம்பித்தானே இந்தக்காரியத்தைச் செய்ய ஆரம்பிச்சேன்.

நாட்டி : நான் கனபாடிகளைச் சுடச்சொன்னேனு ?

முகுந் : நீ ஏண்டாப்பா துப்பாக்கியிலே ஒரு குண்டுக்கு மேலே போட்டு வச்சிருந்தே ?

நாட்டி : நான் மருந்து போட்டா உன்னைச் சுடச் சொல்லி யிருக்கோ ? சரி. அது போகட்டும். இப்போது ஒரு சமாசாரம். நீ சுட்டறப்போ நான் அங்கே வந்தேன். ஆனுல் சட்டென்று. மறைந்துகொண்டேன். மறைந் தாப்போலே எல்லாத்தையும் பார்த்துக் கொண்டேன். இப்பொ முகுந்த் அய்யர்வாள் சிண்டு, பகதூர் நாட்டி யிடம் இருக்கிறது, தெரியுமாப்பா ?

முகுந் : (பரிதாபமான குரலில்) தெரியுமே. என்னை என்ன டாப்பா செய்ய சொல்றே ? தலை கீழாக நடக்கச் சொன்னுலும் செய்யத் தயார்டா அப்பா.

நாட்டி : வாஸ்தவமாகவா ? அப்படியானுல் எனக்கு தாத்தா வோட ரொக்கத்திலிருந்து ஆயிரம் ரூபாய் கொடு.

முகுந் : எதுக்கடாப்பா அவ்வளவு ரூபாய் ?

நாட்டி : சொல்லட்டா ? ஊர்லே நம்மகிட்ட பாடம் படிச்சு முன்னுக்கு வந்த பாரிஸ்டர்கள் ரொம்பப்பேர் இருக் கா ! அவாள்ளே ஒருவரைப் பிடிச்சு, உனக்கு வக்கா லத்து வாங்கிண்டு, ஆபத்து வராமப் பார்த்துக்கறேன். முதல்லே ஆயிர ரூபாய் போதும், அதுக்கு. கேஸ் முடிஞ்சப்பறம், அதுதான், முரளி ஜெயிலுக்குப் போ னப்புறம் ஒரு மூவாயிரம் கொடு, போதும்.

முகுந் : (தலையைச் சொரிந்துகொண்டு) சரி, நான் கோர்ட்டுக்கு வரணுமா ?

நாட்டி : சாக்ஷி சொல்ல வான்னு அழைப்புப் பத்திரம் மேளா தாளத்தோடே வரும். அப்போ கோர்ட்டுக்கு வராமல் இருப்பாளாடா ?

முகுந் : கோர்ட்டிலே நான் என்ன செய்யணும் ?

நாட்டி : சொல்றேன் கேளு. நான் உனக்கு மூன்று பாயிண்டு கள் சொல்லித் தருகிறேன்.

முகுந் : ஆருகச் சொல்லிவையேண்டாப்பா ?

நாட்டி : ஏண்டா ஆறு ?

முகுந் : இல்லே. இப்போ ஒரு மூணு உபயோகிச்சுண்டா, ஸ்டாக்கிலே ஒரு மூணு இருக்கும். உன்னைத் தே டிண்டு வரும் சிரமம் குறையுமேன்னு பார்த்தேன்.

நாட்டி : ஐயோ ! ரொம்ப புத்திசாலி ஆயிட்டே போலிருக்கே ? நான் சொல்றதைக் கவனமாகக் கேளு. கோர்ட்டிலே வந்து நான் ஒண்ணும் பேச முடியாது. தத்துபித் தென்று ஏதாவது உளறி வைக்காதே. நான் மூணு பாயிண்டுகள் சொல்லிவைக்கிறேன். அதன் படி நட.

முகுந் : அது என்னடாப்பா அது ?

நாட்டி : கவனமாகக் கேளு. முதல் பாயிண்டு, நானும் நீயும் எப்பொழுதும் இணை பிரியக்கூடாது. (உடனே முகுந்த், 'இரு' இரு' என்று சொல்லி, நாட்டி கையில் தன் கையை மாட்டிக்கொண்டு!) (எப் போதும் இணைபிரியக்கூடாது, அப்புறம் !) என்கிருன்) இரண்டாவது பாயிண்டு, கோர்ட்டிலே இருக்கிற நேரமெல்லாம் யாரையும், எதையும் கவனிக்காமல், இரண்டு வரிசைப் பல்லுக்கு நடுவிலே நாக்கை வைத் துக்கொண்டு முரளி கொன்னுன், முரளி கொன்னுன்னு சதா ஸ்மரணை செய்துகொண்டிருக்கணும்.

முகுந் : அடே ! இரு இரு ! இரண்டு வரிசைப் பல்லுக்கு மத்தி யிலே, நாக்கு...(அது மாதிரி செய்துகொண்டு, (முரளி கொன்னுன், முரளி கொன்னுன், என்கிருன்)

நாட்டி : அடே ! விளையாடுகிருயா ?

முகுந் : இல்லேடாப்பா. ஒத்திகை செய்து பார்க்கிறேன்.

நாட்டி : மூன்றுவது பாயிண்ட். எந்த சமயத்திலும், எக்கார ணங்கொண்டும், எது வந்தாலும், எது போனாலும் என்னைக் காட்டிக்கொடுக்கக்கூடாது.

முகுந் : சரிதாண்டாப்பா.

(பிரிகிறார்கள்)

(திரை விழுகிறது)

## காட்சி 30

### இடம் : கோர்ட்டு

(கோர்ட்டில் ஏராளமான ஜனங்கள் கூடியிருக்கின் றனர். அங்கு நாட்டி வருகிறான். அவன் கையில் தன் கையைக் கோர்த்துக்கொண்டு வந்து முகுந்தன் உட்காருகிறான். கைப்பிடியை முகுந்தன் விடவில்லை. முரளியின் மாமனாரான மாதவராவும் மற்றொரு புறத் தில் காணப்படுகிறார்)

கோர்ட் : ஸைலன்ஸ்! ஸைலன்ஸ்! (ஜட்ஜ் வர, எல்லாரும் எழுந்திருக்க, ஜட்ஜ் அமர்ந்ததும், அனைவரும் அமர் கின்றனர்)

ஜட்ஜ் : இன்று நடைபெறவேண்டிய கேஸ் விசாரணை ஆரம்ப மாகட்டும்.

குமாஸ்தா: பிரதிவாதி முரளிதரரைக் கூப்பிடு.

பியூன் : முரளீ...முரளி...முரளி...(முரளிதரரைக் கொண்டு வந்து நிறுத்துகின்றனர்)

ஜட்ஜ் : மிஸ்டர் ராவ்! நீங்கள் ஆரம்பிக்கலாம் விசாரணையை.

நா. ராவ் : ஐயா, உம்முடைய கக்ஷி என்ன என்பதைக் கூறும்.

முரளி : ஐயா! இந்தக் கேஸ் விஷயத்தில் நான் ஏதும் சொல் லத் தயாராயில்லை. போலீஸாருக்குக் கிடைத்திருக்கும்

ருஜு க்களிலிருந்து என்ன முடிவானாலும் நான் ஏற்கத் தயாராயிருக்கிறேன்.

நா. ராவ்: இல்லை! நடந்தது என்ன என்பதை நீர் சொல்லவேண்டும்.

முரளி; கையுங் களவுமாக துப்பாக்கியுடன் என்னைக் கைது செய்திருக்கின்றனரே. என்றால் யாருக்கும் எத்தகைய தொந்தரவும் ஏற்பட நான் விரும்பவில்லை. என் விதி நான் கஷ்டப்படுகிறேன்.

நா. ராவ்: இதற்கு மேல் நீர் ஏதும் சொல்லமாட்டீரோ?

முரளி: (மௌனம்)

எதிர், வக்கீல்: அவரை நிர்ப்பந்திக்கவேண்டாம். குற்றத்தை ஒப்புக்கொள்வதுபோல் மௌனம் சாதிக்கிறாரே!

நா. ராவ்: அதற்குள் தாங்கள் அவசரப்படவேண்டாம் ஸார்! கனம் கோர்ட்டார் அவர்களே, அடுத்தபடியாக ராதாவை வரவழைக்கவேண்டும்.

பியூன்: ராதா...ராதா...ராதா...

(ராதா வர, அவளைக் குமாஸ்தர் சத்தியம் செய்விக்கிறார்)

நா. ராவ்: உனக்கு இக்கேஸைப் பற்றி என்னம்மா தெரியும்? அதெல்லாம் சொல்லு.

ராதா: ஐயா. நான் ஓர் பால்ய விதவை. அநாதியான என்னை ஜமீன்தார் அருமையாக வளர்த்துவந்தார். என்னைக் கனபாடிகளும், அதோ உட்கார்ந்திருக்கும் முகுந்தனும் கெடுத்தழித்தனர். (முகுந்தன் நாட்டியிடம் ஏதோ சொல்ல, முகுந்தனை நாட்டி நன்றாகக் கிள்ளி விடுகிறான்)

முகுந்: ஐய்யய்யோ...(என்று கத்த, கோர்ட் பியூன் 'ஸைலன்ஸ்' என்று கூறி, கூச்சலை அடக்குகிறான்.)

ராதா : ஜமீன்தார் இறந்ததும், முகுந்தைவிட்டால் என் கதி அதோகதியாகி விடும். ஆகவே அவன் கைப்பொம் மையாகவே ஆடி வந்தேன். இதற்கிடையில் அதோ, அந்தப் படுபாவி நாட்டியின் உபதேசப்படி முகுந்தன் ஒரு பக்கம், அந்தக் கனபாடிகள் மற்ருெரு பக்கம் ஜமீன்தாரரின் சொத்தைத் தமதாக்க வழி செய்து வந்தனர். ஆனால், ஜமீன்தார் எழுதிவைத்த உயிலே பத்மா கொடுக்க மறுத்து விட்டாள். கடைசியாக வெடிகுண்டு சப்தம் கேட்டு நான் ஓடிவந்தபோது, முரளியைத் துப்பாக்கியும் கையுமாக போலீஸார் பிடித்திருந்தனர். கீழே கிடந்த பத்மாவைக்கவனித்துக் கொண்டிருந்தேன். அவளது இடுப்பில் இருந்த உயிலே நான் எடுத்தேன். அது ஒரு கவரில் இருந்தது. கவ ரின் மேல் மாதவ ராவ், ரிடையர்டு டெப்டி கலெக்டர், சிதம்பரம் என்று எழுதப்பட்டிருந்தது. அக்கவருக் குத் தபால் தலேயொட்டி தபாலில் போட்டுவிட்டேன். மாதவராவ் யாரோ தெரியாது. அவரிடமிருக்கிறது இப்பொழுது உயில். இவ்வளவு தான் எனக்குத் தெரியும்.

முகுந் : ஐயா! கோர்ட்டார் அவர்களே! நான் சில வார்த்தை கள் சொல்லவேண்டும்.

ஜட்ஜ் : சரி, சொல்லும்.

(முகுந்தனேச் சத்தியம் வாங்குகிருர்கள்).

முகுந் : (நாட்டியைப் பார்த்து) என்னப்பா சொல்லிடட்டுமா ?

நாட்டி : (ஒன்றும் பேசாமல் நரநரவென்று பல்லேக் கடிக்கிருன்)

முகுந் : மஹாகனம் ஜட்ஜ் அவர்களே ! கோர்ட்டார் அவர் களே ! இங்கு கூடியிருக்கும்...

நா. ராவ் : ஐயா ! அனுவசியமாக நேரத்தைப் போக்கவேண்டாம். இது கோர்ட் என்பதும், விளேயாடும் இடம் இல்லே என்பதும் நினேவில் இருக்கட்டும்.

முகுந் : எஸ் ஸார். இந்தக் கேஸில் ஸார், நான் ஸார்...

(சட்டென்று பையிலிருந்த ரிவால்வரை வெளியே எடுக்கிருன். கோர்ட்டிலுள்ளவர்கள் திகைக்கின்றனர். ராதாவைப் பார்த்துக் குறி வைக்கிருன் முகுந்தன். போலீஸார் அவனைப் பிடித்து ரிவால்வரைப் பிடுங்கிக்கொண்டு கைகளைக் கட்டி தூர நிறுத்துகின்றனர்)

அடே நாட்டி ! என்னடா பேசாமே இருக்கிருயே ?

நா. ராவ். : அவரை ஏன் கூப்பிடுகிறீர்கள் ?

முகுந் : இல்லை ஸார். அவன்தான் இந்த வேலைகளிலெல்லாம் கைதேர்ந்தவன். நமக்குப் பிளான்கள் போட்டுக் கொடுக்கிறவன். நீங்க வேணும்னு ஒரு கொலை செய்துட்டு தப்பறத்துக்கு என்னசெய்கிறதென்று அவனைக் கேளுங்களேன். எப்படி ஷோர்க்காய் சொல்ருன் பாருகளேன்.

(கோர்ட்டில் சிரிப்பு)

நா. ரால். : அதிருக்கட்டும். இப்போ நடந்திருக்கும் கொலைகளுக்கு அவர் ஏதாவது பிளான்கள் போட்டதுண்டா ?

முகுந் : உம்... ஆமாம் ஸார்... ! அவன்தான் இந்த ரிவால்வரை கொஞ்ச நேரத்துக்கு முன்னே என் பாக்கெட்டிலே போட்டு, ராதாவைச் சுட்டுடுடா, சுட்டுடுடா என்று என் உசிரை வாங்கிட்டான் ஸார் ! அப்படிச் செய்யலாமாடான்னு நான் கேட்டேன். அவன் என்ன செய்தான் தெரியுமா ஸார் ? இன்னுங்கூட அந்த இடம் எரியறது ஸார். நறுக்கென்று கிள்ளிவிட்டான் ஸார்.

நா. ராவ். : அப்புறம் ?

முகுந் : அவன் சொன்னபடி செய்ய எனக்கு இஷ்டமில்லை. இதற்கு முந்தி நடந்த விஷயங்களைப்பற்றிச் சொல்லி விடுகிறதென்று நான் தீர்மானித்துவிட்டேன். எழுந்

தேன். என்னைப் பிடித்துக்கொண்டார்கள் அவர்கள். (போலீஸாரைப் பார்த்து) ஒத்தி நில்லுங்கள் ஐயா.

நா. ராவ். : சரி, முந்தி நடந்ததென்ன ?

முகுந் : அவன் சொல்லிக் கொடுத்த பிரகாரமே தாத்தாவை க்ளோஸ் செய்தேன். தாத்தா செத்துப் போனப்புறம் பத்மாவிடம் உயிலைக்கேள், இல்லாவிட்டால் சுட்டு விடுன்னான். அப்படியே போனேன். உயிலைக் கேட்டேன். அவ கொடுக்கலை. நான் சுட்டேன். அவ செத்தா. கனபாடிகள் வந்தார். என் கை அவரையும் சுட்டது. எங்கிருந்தோ முரளி வந்தான். ரிவால்வரைப் பிடுங்கினான். நான் கொலை கொலை என்று கத்தினேன். கூட்டம் கூடிற்று. போலீஸார் முரளியைப் பிடித்து கைது செய்தார்கள். அப்புறம் என்ன செய்றதென்று நாட்டியைக் கேட்டேன். அவன் மூணு பாயிண்டுகள் சொல்லிக் கொடுத்தான் ஸார். தவிர, எத்தனையோ பாரிஸ்டர்கள் இவனிடம் பாடம் கத்துண்டவாளாம். அவாள்ளே ஒருத்தரை கேசுக்கு அமர்த்தறேன்னு ஆயிரம் ரூபாய் பணம் வேறே வாங்கிண்டிருக்கான் அவன்.

நா. ராவ். : இவ்வளவுதானே ? கனம் கோர்ட்டார் அவர்களே! இந்த நாட்டியையும் கைது செய்ய உத்தரவிடப் பிரார்த்திக்கிறேன்.

ஜட்ஜ் : நாட்டியையும் கைது செய்யுங்கள்.

(நாட்டியைப் போலீஸார் கைது செய்கின்றனர்).

முகுந் : என்ன நாட்டி! பஸ்ட் பாயிண்ட்! (நாட்டியின் கையில் தன் கையை மாட்டிக் கொள்கிறான். நாட்டி உதறித் தள்ளுகிறான்).

நா. ராவ். : ஐயா, தங்களுடைய பெயர் என்ன ?

நாட்டி : நடராஜன். நாட்டி என்பது முகுந்தன் வைத்த பெயர்.

நா. ராவ். : அவர் சொன்னதெல்லாம் கேட்டீர்களா ? தாங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள் ?

நாட்டி : நான் சுத்த நிரபராதி. அதைத் தவிர வேறெதுவும் சொல்ல நான் விரும்பவில்லை.

ஜட்ஜ் : சரி, மாதவ ராவிடம் உயில் இருக்கிறதென்று ராதா பாய் கூறினரே. அந்த மாதவ ராவ் யார் ?

பியூன் : மாதவ ராவ், மாதவ ராவ்...

மாதவ ராவ் : இதோ இருக்கிறேன். நான் ஒரு ரிடையர்டு டெபுடி கலெக்டர். சிதம்பரத்திலிருப்பவன். இந்தக் கேஸில் சிக்கிக்கொண்டிருக்கும் முரளி என் மாப்பிள்ளை. சில தினங்களுக்கு முன் என் விலாசமிட்ட கவர் ஒன்று வந்தது. அதை அனுப்பியவர் விலாசம் ராதா என்று இருந்தது. அந்தக் கவரை உடைத்துப் பார்க்க, அதில் ஒரு உயில் இருந்தது. அதோடு அந்தக் கடிதத்தில் உயில் முரளிக்குச் சேரவேண்டியது என்று பத்மா என்பவரால் எழுதப்பட்டிருந்தது. அதற்குள் பத்திரிகைகளில் இந்தக் கேஸ் விபரத்தைப் பார்த்து, இங்கு வந்து முரளிக்காக ஒரு வக்கீலை அமர்த்திக் கொண்டேன். இதோ இருக்கிறது உயில்.

(உயிலை ஜட்ஜினிடம் கொடுக்கிறர்)

ஜட்ஜ் : சரி! கொலை நடந்த தினம் முகுந்தன் அவர்களது வீட்டில் வந்து கூடி முரளியைப் பிடித்தவர்களது வாக்குமூலங்களையும், முகுந்தன் கொடுத்த வாக்குமூலங்களையும் கேட்டுக் கீழ் கோர்ட்டார் முரளியின்மீது குற்றம் ருஜுவாயிருக்கிறதென்று தீர்மானித்திருக்கின்றனர். ஜூரர்களே, இன்று நீங்கள் வாக்குமூலங்களைக் கேட்டிருக்கின்றீர்கள். இப்பொழுது உங்கள் அபிப்பிராயத்தைக் கலந்து யோசித்துச் சொல்லுங்கள்.

(ஜூரர்கள் எழுந்து செல்கின்றனர். கோர்ட்டில் கலகலவென்று பேச்சு. சேவகன் 'சைலன்ஸ்' என்று கத்துகிறன். ஜூரர்கள் வருகிறர்கள்)

ஜூரர் : முரளி நிரபராதி என்று நாங்கள் அபிப்பிராயப்படுகிறோம். முகுந்தன் உண்மையான குற்றவாளியென்றும், ஆனால் அவர் சுயபுத்தியில் ஏதும் செய்யவில்லையென்றும், எல்லாம் நடராஜனின் தூண்டுதலின்பேரிலேயே செய்திருக்கிறார் என்றும் ஏகமனதாக அபிப்ராயப்படுகிறோம்.

ஜட்ஜ் : நாமும் அதே அபிப்ராயப்படுகிறோம். ஆகவே முரளியை விடுதலை செய்ய உத்தரவிட்டிருக்கிறோம்.

(முரளி விடுவிக்கப்படுகிறான். கோர்ட்டில் கலககலப்பு)

ஜட்ஜ் : முகுந்தன் ஏதும் செய்யாததாலும், அவர் ஜமீன்தார் வீட்டுப் பிள்ளையாதலாலும், சுயமாக இவ்வாறு கொலை செய்யவேண்டிய அவசியமும் அவருக்கு இல்லையாதலாலும், அவருக்கு ஒரு வருடம் காவல் தண்டனை கொடுத்திருக்கிறோம். இவை எல்லாவற்றையும் பின்னலிருந்து நடத்திவைத்த நாட்டிக்குப் பத்து வருட கடுங்காவல் தண்டனை விதித்திருக்கிறோம். தவிர, இந்த உயில் முரளிக்குச் சேரும். ஜமீன்தாரது சொத்து முழுவதும் அவருக்கே ஆகும். இதோடு கோர்ட் கலையும்.

(திரை விழுகிறது)

## *காட்சி 31*

### இடம் : தெரு

**பாத்திரங்கள் :** முகுந்தன், நாட்டி, போலீஸ் சேவகர்கள்

(நாட்டியும் முகுந்தனும் கையில் விலங்கோடு போலீஸார் சூழ வருகிறார்கள்)

முகுந் : நாட்டி! கையிலே விலங்கு கனமாயிருக்கேடா அப்பா!

நாட்டி : அப்போ கோர்ட்டிலே சமாசாரத்தை வெளியிடறப்போ லேசா இருந்ததோ?

முகுந் : நாட்டி! இதிலிருந்து தப்ப ஏவாவது ஒரு பிளான் சொல்லேன்.

நாட்டி : சீ போதுமே! உனக்கு நான் ப்ளான்கள் சொல்லிக் கொடுத்த லக்ஷணம். இருந்திருந்து உனக்கு உபதேசம் செய்ய வந்தேனே நான். அதன் பலனைப் பார், ரெண்டு பக்கத்திலேயும்.

(போலீசார்களைக் காட்டுகிருன்)

முகுந் : இப்போ இரண்டு போலீஸ்காரர்கள்தானே இருக்கா. இன்னொரு ப்ளான் சொல்லு. ஒண்ணு இந்த இரண்டு பேரும் போயிடணும். இல்லாட்டா இன்னும் ஏழெட்டுப் பேர் வரணும்.

நாட்டி : போடா போ ராஸ்கல்! எனக்கென்னடா பத்து வருடம் பத்து நிமிஷத்திலே போயிடப்போறது.

(முகுந்தன் நாட்டியின் கையைப் பிடித்து)

முகுந் : இரப்பா, பஸ்டு பாயிண்டு, நீயும் நானும் ஒண்ணு.

நாட்டி : (கோபத்துடன்) போடா. பஸ்டு பாயிண்ட்லே மண்ணை வாரிப்போட, நாயே!

முகுந் : நாய்தான் ஒரு வருஷம் ஆனதும் ஓடிவிடப் போறதே. கழுதைதான் பத்து வருஷம் கிடக்கப் போறது...வாடா அப்பா. போகலாம்.

(திரை விழுகிறது)

## காட்சி 32

### இடம்: மாதவ ராவ் வீடு

பாத்திரங்கள் : சரசா, முரளி, மாதவராவ், சந்துரு

(டெபுடி கெலக்டர் மாதவ ராவ் வீட்டில் பூஜை அறை. சரசா, தேவி முன் அமர்ந்து தனது நாயகன்

ஆபத்தின்றி மீளவேண்டுமெனப் பிரார்த்திக்கிருள். பாடுகிருள்)

சரசா : பத்திரிகைச் சேதியைப் படித்த க்ஷணத்திலிருந்தே என் மனம் நிம்மதியற்று இருக்கிறது. ஒரு எறும்பை யும் வதைக்க விரும்பாத என் கணவரா கொலைக் குற்றம் செய்யத் துணிந்திருப்பார்? இல்லை. இல்லை. இது அநியாயம். அவர் சுத்த நிரபராதி. தயாபரி, தேவி! நீதான் அவர் பக்கலில் நின்று நியாயம் பிறக்க வழி செய்யவேண்டும். ஜகதம்பா, சங்கரி, உன்னைத் தவிர வேறு யாரிடம் நான் முறையிடப் போகிறேன்? எனது குடும்ப வாழ்க்கையிலே அடைந்து கிடக்கும் இருளைப் போக்கி, ஒளி தோன்றச் செய்வாய் கருணாகரி, கமலவதனி. தெய்வ சக்தியில் நம்பிக்கை உள்ளவர்களுக்கு பலம் அளிக்கும் வகையில் எனது நாயகர் நிரபராதி என்ற உண்மை நீதிபதியின் உள்ளத்தில் தோன்ற வைப்பாய், லோக நாயகி!

(மாதவ ராவ் பிரவேசிக்கிருர்)

மாத : குட் நியூஸ் சரஸா. முரளீ விடுதலை செய்யப்பட்டான். அதோடு ஜமீன்தாரராகவும் ஆகிவிட்டான்.

சரசா : (ஆனந்தத்துடன்) அப்படியா? தேவி எல்லாம் உன் கருணை.

(அம்மனிடம் ஓடி நமஸ்கரித்துவிட்டு, தந்தையிடம் வந்து) அப்பா! எங்கேயப்பா அவர்? உங்களுடன்...

மாத : அடுத்த ரயிலில் வருவதாகச் சொன்ருரம்மா.

சரசா : சரி என்று நீங்கள் வந்துவிட்டீர்களாக்கும். போங்கப்பா. இப்படித்தான் நீங்கள்...

மாத : வாஸ்தவம், நான் ஒரு இடியட் தான். நீ கோபித்துக் கொள்ளாதே. கடந்துபோனவற்றையெல்லாம் மறந்து, க்ளீனுக டிரஸ் செய்துகொண்டிரு, மாப்பிள்ளையை ரிஸீவ் செய்ய.

சரசா : சரி அப்பா.

(உள்ளே ஓடுகிறாள். ஸீன் நந்தவனமாக மாறுகிறது. சரசாவும், முரளியும் எதிர்ப்புறங்களிலிருந்து வருகிறார்கள்)

சரசா : நாதா...

முரளி ; சரசா. (அணைத்துக்கொள்கிறான்) சரசா என்ன இது ? சுத்த அசடாக இருக்கிறாயே. இன்னும் என்ன கண்ணீர் வேண்டியிருக்கிறது ? எங்கே, முகம்...கொஞ்சம்...அ...பேஷ். சூரியனைச் சூழும் மேகம் நிரந்தரமாக அவனை மறைத்திராது என்று சொன்னேனா இல்லியா ? நான் சொன்னபடி நடந்ததா இல்லியா ?

சரசா : ஆமாம். நீங்கள் ஒரு பெரிய ஜோஸ்யர்தான்.

முரளி : ஜோஸ்யரா ? இப்படி வாயேன் !

(அருகில் அணைத்து நிறுத்திக் கொள்ள முயல, பையன் சந்துரு, 'அப்பா' என்று ஓடி வருகிறான். சரசாவும், முரளியும் வெட்கத்தால் ஒதுங்கி நிற்கிறார்கள்)

சந்துரு : என்னம்மா சொல்கிறார் அப்பா ?

(சரசா முரளியைப் பார்த்து சிரித்துக்கொண்டே, சந்துருவை அருகில் இழுக்கிறாள். மாதவ ராவ் வருகிறார்)

மாத : ஹல்லோ...முரளி...என் மனைக்குத் தங்கள் வரவு நல் வரவாகுக...

முரளி : என் வரவா ?...இந்த தகடி பிக்ஷாண்டி...

மாத : அதெல்லாம் (ஓல்ட் ஸ்டோரி) மிஸ்டர் முரளி. இனிமேல் எல்லாம் புதுக் கதை. உம்முடைய அந்தஸ்து தான் இப்பொழுது திரும்பவும் ஜமீன்தார் நிலைமைக்கு உயர்ந்துவிட்டதே.

முரளி : ஜமீன்தார், கிமீன்தார் எல்லாம் இனிமேலே கிடையாது மாமா. நான் இனி ஒரு சமூக ஊழியன். இந்த அந்தஸ்தில் உங்கள் மாப்பிள்ளையாக நான் இருக்கலாமா ?

மாத : பேஷா ! சரி ! அடே சந்துரு. இப்படி வா. பப்பர் மிட்டு வாங்கித் தருகிறேன். உனக்கு...உம்...நான் வர்ரேன்.

(போகிறுர் சிரித்துக்கொண்டே)

முரளி : கம் ஆன் மை டார்லிங்.

(கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு தோட்டத்திற்குள் ஓடுகிருன்)

(திரை விழுகிறது)

சுபம்.




ஞானேதயா பிரஸ், 11, ஆண்டர்சன் தெரு, மதருஸ்-1.

